

## வரலாற்று நாயகன்

# பயோனியர் குமாரசாமி

திருத்தமிழ்த்தேவனார்

# நூல் விபரம்

// நூலின் பெயர்: வரலாற்று நாயகன் பயோனியர் குமாரசாமி // பொருள்: வரலாறு // நூலாசிரியர்: திருத்தமிழ்த்தேவனார், வழக்கறிஞர், நாகர்கோயில், தொடர்புக்கு: 83 00 20 71 93 // முதல் பதிப்பு: சனவரி 2022 // வெளியீடு: தெற்கு எழுத்தாளர் இயக்கம், நாகர்கோவில் // பதிப்பகம்: நெய்தல்வெளி, 153சி, ஈத்தாமொழிச் சாலை, நாகர்கோயில், தொடர்புக்கு: 93 675 100 43 // அட்டை வடிவமைப்பு: சவகாசி // அச்சாக்கம்: ரியல் இம்பேக்ட் சொலுயூசன், சென்னை // பக்கம்:110 //விலை ரூ 100/– //



# பயோனியர் குமாரசாமி ஒரு கல்லூரி

நான் பிறந்த காலகட்டத்தில் பயோனியர் குமாரசாமி அவர்கள் மறைந்துவிட்டிருந்ததால் அவர் பெயரோ வரலாறோ எனக்கு இளம் பருவத்தில் தெரியவில்லை. நான் பதினொராம் வகுப்பு பொதுத் தேர்வில் வெற்றிபெற்று, மதிப்பெண் சான்றிதழ் வாங்கிவிட்டு நேராக வீட்டுக்குச் சென்றேன். தான் எதிர்பார்த்தபடி அதிக மதிப் பெண்களை நான் பெறாத கோபத்தால், எனது தந்தையார் என் மதிப் பெண் சான்றிதழை மேலோட்டமாகப் பார்த்துவிட்டு தூர எறிந்து விட்டார். உயர்கல்விக்கு கல்லூரியில் இடம் பிடிக்க தான் உதவப் போவதில்லை என்றும் அறிவித்தார். மிகுந்த வேதனையிலும் வருத்தத்திலும் இருந்த எனக்கு என்ன செய்வதென்று தெரிய வில்லை.

வெறும் பதினாறு வயது நிரம்பியிருந்த எனக்கு எங்கே போவது, யாரை பார்ப்பது என்று எதுவும் புரியவில்லை. எனினும் ஓர் அசட்டு தைரியத்துடன் அப்போது நாகர்கோவில் நகரில் புகழ்பெற்றிருந்த பயோனியர் குமாரசாமி கல்லூரிக்கு தனியாகவே சென்றேன். யாரிடமும் வலியச் சென்று பேசாத கூச்ச சுபாவம் கொண்ட நான் விண்ணப்பம் ஒன்றை வாங்கி அங்கேயே பூர்த்தி செய்து, மாணவர் களிடம் நேர்காணல் நடத்திக் கொண்டிருந்த பேராசிரியர் குழுவையும் துணிச்சலுடன் சந்தித்தேன். கணிதத்துறைத் தலைவர் பேராசிரியர் எபனேசர் பால்ராசு அவர்களிடம் பேசி பி.யு.சி. கணிதம் வகுப்பில் இடமும் வாங்கிவிட்டேன். அப்போதைய முதல்வர் பேராசிரியர் ஆர்தர் டேவிசின் அலுவலகத்திலிருந்தே வீட்டருகே உள்ள ஒரு கடைக்கு தொலைபேசி அழைப்பு விடுத்து, அப்பா அம்மா விடம் பேசி கல்லூரிக்கு வரவழைத்து பணம் கட்டச் செய்தேன். அந்த நாளும், எனது முனைப்புகளும் என்னை தன்னம்பிக்கையின் உச்சத்திற்கே இட்டுச் சென்றன.

அப்போது பயோனியர் குமாரசாமி என்பவர் யாரென்று எனக்குத் தெரியாது. கல்லூரியில் வகுப்புகள் ஆரம்பித்தபோதுதான் அவரைப் பற்றி, அவரின் ஆளுமைத் திறன் பற்றி, முனைப்புகள் மற்றும் முயற்சிகள் பற்றி, 'பயோனியர்' என்கிற பதம் பற்றி, அந்த வாக்குக்கு அவர் வாழ்ந்தளித்த அர்த்தம் பற்றியெல்லாம் கேள்விப்படத் துவங்கினேன். அந்தப் பெரியவர்மீது ஓர் அபார மரியாதை ஏற்பட்டது. அவர் பெயர் கொண்ட கல்லூரியில் தனியாகப் போய் இடம் வாங்கியதே அவ்வளவு பெரிய 'சாதனையாளன்' என்கிற உணர்வை எனக்குத் தந்ததென்றால் அவரின் அற்புதமான வாழ்வு என்னை உண்மையிலேயே ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

அடுத்த நான்காண்டுகள் பயோனியர் குமாரசாமி கல்லூரியும், பேராசிரியர் எபனேசர் பால்ராசும், பேராசிரியர் ஆர்தர் டேவிசும் மற்றும் பிற ஆசிரியர்களும் என்னை ஒரு சிறந்த மாணவனாக்கினர்; மனிதராக்கினர். நான் மாணவனாக இருந்த காலகட்டத்தில், பயோனியர் குமாரசாமி கல்லூரியில் ஆசிரியர்கள் மற்றும் மாணவர்கள் பெரும் போராட்டங்களில் ஈடுபட்டனர். முன்னணித் தலைவர்களுள் ஒருவனாய் நானிருக்கவில்லை என்றாலும் ஆசிரியர் மற்றும் மாணவர்களோடு வேலை நிறுத்தம், சாலை மறியல், பேரணி எனப் போராட்டங்களில் கலந்து கொண்டேன். ஒரு முறை கைது நடவடிக்கைக்கும் உள்ளானேன்.

பயோனியர் குமாரசாமி அவர்களின் பெயர் தாங்கிய கல்லூரியில் படிக்கும் ஒருவன் அந்த அபார ஆளுமையின் ஒரு சிறிய அளவை யாவது உள்வாங்க வேண்டாமா? பயோனியர் குமாரசாமி அவர்கள் ஒரு தலைசிறந்த தன்முனைப்பாளர்; ஆங்கிலத்தில் சொல்வ தென்றால், entrepreneur! "முயற்சி திருவினையாக்கும் முயற்றின்மை இன்மை புகுத்திவிடும்" எனும் குறளுக்கு இலக்கண மாக வாழ்ந்தவர். வணிக மேலாண்மை வகுப்புகளில் பாடமாய் படிக்கப்பட வேண்டியவர். அவரின் சிறப்புகள், உயர்வுகள் பற்றி யெல்லாம் இந்த நூலாசிரியர் தோழர் திருத்தமிழ்த்தேவனார் விரிவாக எழுதி இருப்பதால் நான் சுருக்கமாகச் சொல்கிறேன்; பயோனியர் குமாரசாமி ஒரு கல்லூரி!

பயோனியர் குமாரசாமி கல்லூரியில் படித்த காலத்தில் பயோனியர் குமாரசாமி அவர்களைப் பற்றி நிறைய அறிந்து கொள்ளும் வாய்ப்பு கிடைத்தது. ஆனாலும் அவரது வாழ்க்கை வரலாற்றை முழுமை யாகப் படித்துணர புத்தகம் எதுவும் எனக்குக் கிடைக்கவில்லை. அந்தக் குறையை தற்போது தோழர் திருத்தமிழ்த்தேவனார் எழுதியிருக்கும் “வரலாற்று நாயகன் பயோனியர் குமாரசாமி” எனும் இந்நூல் போக்கியிருக்கிறது.

வாழ்க்கை வரலாற்று நூல் எழுதுவது என்பது அவ்வளவு எளிதானதல்ல. இன்னொருவரின் வாழ்க்கையை, அவர் வாழ்வின் சம்பவங்களை, தத்துவங்களை, சிந்தனைகளை, செயல்பாடுகளை சோர்வு எழச் செய்யாமல் ஈடுபாட்டோடு எடுத்துச் சொல்வது உண்மையிலேயே ஒரு கலை. தோழர் திருத்தமிழ்த்தேவனார் அந்தக் கலையில் கைதேர்ந்தவராக இருக்கிறார். குமரி மாவட்டத்தின் குறிப்பிடத்தக்க ஆளுமைகளான திரு. துரைசாமி, திருமதி. லூர்தம்மாள் சைமன் போன்றோர் பற்றியெல்லாம் புத்தகங்கள் எழுதியிருக்கிறார். இந்த அனுபவத்தின் விளைவால், அவர் எழுதி யிருக்கிற இந்நூல் செழுமையுடையதாக இருக்கிறது. கதை சொல்லும் பாங்கு கட்டிப் போடுகிறது. அவரது நடை, தெளிந்த நீரோடை போன்று சரளமானதாக வேகமானதாக இருக்கிறது.

புத்தகத்தைப் படிக்கும்போது ஒரு மிகச் சிறிய அடக்குமுறைக் குள்ளான சிறுபான்மை சமூகத்தில் பிறந்த பயோனியர் குமாரசாமி அவர்கள் எப்படி அவ்வளவு பெரிய வெற்றியைப் பெற்றார் எனும் கேள்வி என்னுள் மீண்டும் தலையெடுத்துக் கொண்டிருந்தது. அந்த காலத்து குமரிச் சமூகம் பற்றிய விவரங்கள், விவாதங்கள் பயனுள்ள வையாக இருந்திருக்கும். அரசியலை, அரசியல்வாதிகளை அவர் வெறுத்தார் என்றாலும், அவற்றை முழுக்கமுழுக்க புறக்கணித் திருக்க முடியாது. எடுத்துக்காட்டாக, பயோனியர் குமாரசாமி அவர்கள் மும்முரமாக இயங்கிக் கொண்டிருந்த காலகட்டத் தில்தான் சுதந்திரப் போராட்டம், திரு தமிழ்நாடு போராட்டம் போன்றவை விறுவிறுப்பாக நடந்து கொண்டிருந்தன. அந்தப் போராட்டங்கள் பற்றிய அவரது நிலைப்பாடு என்ன, ஏதாவது பங்களிப்பு செய்தாரா என்பன போன்ற பல கேள்விகள் மனதில் எழுகின்றன.

பயோனியர் குமாரசாமி அவர்கள் பற்றி எழுதியிருக்கும் தோழர் திருத்தமிழ்த் தேவனாரும் ஒரு பன்முக ஆளுமை உடையவர்தான். பல்வேறு சமூகப் பிரச்சனைகள், தத்துவார்த்த விடயங்கள், ஆன்மீகத் தேடல்கள் பற்றியெல்லாம் சர்ச்சைக்குரிய கருத்துக்களை துணிச்சலாகச் சொல்பவர். வில்லங்கமான புத்தகங்கள் எழுதி விவாதங்களை எழுப்புகிறவர். அவரோடு எனக்கும் சில கருத்து வேறுபாடுகள் உண்டு என்றாலும், நாங்கள் பல தளங்களில் ஒன்றாக இயங்கி வருகிறோம். அவரின் இந்த சீரிய நூலுக்கு சிறிய அணிந்துரை எழுதுவதில் மிக்க மகிழ்ச்சியடைகிறேன். நன்றி!

**முனைவர் சுப. உதயகுமாரன்,**
பச்சைத் தமிழகம்,
நாகர்கோவில்.



# சமூகப் பங்களிப்பு செய்தவர்களின் வரலாறுதான் முன்றைய மனிதரின் நற்கொடை

பயோனியர் குமாரசாமி அவர்கள் 1897இல் பிறந்து 1960இல் மறைந்தவர். இவர் பிறந்து வாழ்ந்த காலகட்டம் கன்னியாகுமரி மாவட்டத்தில் முக்கிய நிகழ்வுகள் நடந்த காலம். குமாரசாமி பிறந்த வருடத்தில் சிறிமூலம் திருநாள் என்ற அரசர் திருவிதாங்கூரை ஆட்சி செய்தார் (1895–1924).

குமாரசாமி வடசேரியில் பிறந்தவர். மூலந்திருநாளுக்கு நாகர் கோவில் வடசேரியுடன் மிகுந்த தொடர்பிருந்தது. இந்த அரசரின் மனைவி வடசேரியைச் சார்ந்தவர். இதனால் அரசர் வடசேரிக்கு அடிக்கடி வருவார். இங்கே ஒரு பயணிகள் விடுதியும் அரசர் கட்டி யிருக்கிறார். வடசேரி சந்தை, இவரது மனைவி கொடுத்த இடத்தில் கட்டப்பட்டது. இப்படியாக குமாரசாமி வாழ்ந்த இடமே வரலாற்றுப் பின்னணி கொண்டது.

குமாரசாமி திருவிதாங்கூர் அரசரான மூலந்திருநாள் காலத்தில் பிறந்து சேதுலட்சுமிபாய் (1924–1931), சித்திரைத் திருநாள் (1931–1948) ஆகியோர் காலத்தில் வாழ்ந்தவர். காமராசரின் ஆட்சியையும் கண்டவர்.

குமாரசாமி பிறந்த சில ஆண்டுகளுக்கு (1860) முன்புதான் நாகர் கோவிலில் தெருக்கள் ஒழுங்குபடுத்தப்பட்டன. ஆயில்யம் திருநாள் ஆட்சி காலத்தில் திருவனந்தபுரம் கன்னியாகுமரி பாதை அரசரின் ரதம் வசதியாகப் போகும்படி சீரமைக்கப்பட்டது. 1913இல் நாகர் கோவிலில் திருவனந்தபுரம் பேருந்து போக்குவரத்து ஆரம்பித்த போது எட்டுபேர் கொண்ட அந்த பேருந்து பயணம் எல்லோருக்கும் உரியதல்ல என்றுதான் பலபேர் நினைத்தார்கள். ஆனால் பயோனியர் பேருந்து சேவை உருவானபின் சாமானியனுக்கும் பயணம் செய்யலாம் என்ற நிலை உருவானது. ஒருவகையில்

சாமான்ய மனிதனின் மதிப்பீடு தொடர்பான விசயம் இது. ஒரு அரசு உருவாக்க வேண்டிய இந்த மதிப்பீட்டை தனிமனிதர் உருவாக்கினார். குமாரசாமியின் சிறப்பே இதுதான்.

நாகர்கோவில் – திருவனந்தபுரம் செல்ல முதலில் 8 மணி நேரமாக இருந்ததை 6 மணி நேரமாகக் குறைத்து பின் 4½ மணி நேரம் ஆக்கினார் குமாரசாமி. பேருந்து டயர் பஞ்சராகிவிடக்கூடாது என்பதற்காகச் சாலையில் லாடம், ஆணி போன்றவற்றை அகற்ற ஆட்களை நியமித்திருந்தார் என்பன போன்ற செய்திகளை நம்ப முடிகிறதா ? உண்மை. திருத்தமிழ்த்தேவனார் இதை பதிவு செய்திருக்கிறார்.

தமிழகத்தில் ஒவ்வொரு மாவட்டத்திலும் தேசத்திற்கு, மொழிக்கு, மதத்திற்கு, ஆராய்ச்சிக்கு, பண்பாட்டிற்கு, தொழில் வளர்ச்சிக்கு எனப் பல்வேறு துறைகளில் பங்ககளித்தவர்களின் வரலாறு குறுநூலாகக்கூட எழுதப்பட்டிருக்கிறதா ? பெரும்பாலும் இல்லை என்று சொல்லிவிடலாம். நாட்டின் வரலாற்றை – பண்பாட்டு வரலாற்றை பழைய ஆதாரங்களிலிருந்து அடையாளங்களாக பெரும் நேரத்தைச் செலவழிக்கும் கல்வியாளர்களும் ஆய்வாளர்களும் தனியாரின் வரலாற்றை எழுத யோசிப்பார்களா ? இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

சமூகப் பங்களிப்பு செய்தவர்களின் வரலாறுதான் முன்றைய மனிதனின் நன்கொடை – இன்றைய மனிதர்களை ஒப்பிட இது அவசியம். ஒரு தேசத்தின்மீது ஏற்படும் நேசம் இந்த மனிதர்களால் உருவாகிறது என்பதும் பலருக்குத் தெரியாது. சராசரி மனிதனுக்கு சமூகப் பங்களிப்பு செய்த மனிதர்களின் வழிதான் சமூகக் கரிசனை உருவாகிறது.

தமிழகத் தொழில் அதிபர்களில் பொள்ளாச்சி மகாலிங்கம், அழகப்பா செட்டியார், அண்ணாமலை செட்டியார், விசி பன்னீர்தாசு என முக்கியரின் வரலாறுகள் எழுதப்பட்டுள்ளன. மாவட்டங்களில் தங்கள் தொழிலை வளர்த்த மூத்த மக்களின் நலன் கருதியவர்களின் வரலாறு பெருமளவில் வரவில்லை என்று கூற முடியும். பெரும்பாலும் இத்தகையவர்களின் சாதி, அரசியல், மதம் போன்ற பலம்தான் இதைத் தீர்மானிக்கும் என்பதில் மாறுபாடில்லை.

திருத்தமிழ்த்தேவனார் தன் இனம், மதத்திற்கு அப்பால்பட்ட ஒருவரை எழுதியிருக்கிறார். குமாரசாமிக்கு பெருமையே இதுதான். இந்த நூலில் குமாரசாமியின் தொழில் வளர்ச்சி, தனிப்பட்ட வளர்ச்சி பற்றிய விவரங்களை மிகைப்படுத்தல் இல்லாமலே கூறுகிறார். அதைவிட முக்கியமாக குமாரசாமியின் சமூக காரியங்கள், தொழிலாளர்களிடம் அவர் கொண்ட அன்பு பற்றிய செய்திகளை முனைப்புடன் நிற்கும்படி திருத்தமிழ்த்தேவனார் பார்த்துக் கொள்கிறார். இதற்கேற்ற எளிய மொழியைக் கையாளுகிறார்.

திருத்தமிழ்த்தேவனார் மேலும் நல்ல பல நூல்களை எழுத முடியும். காலம் இருக்கிறது. படைப்பார்; நம்பிக்கை இருக்கிறது.

அ.கா. பெருமாள்,
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர்,
நாகர்கோவில்.

# பதிப்புரை



பயோனியர் ஓட்டுப்பணியிலான வீட்டில் வளந்திருக்கிறேன்.
பயோனியர் பேருந்தில் பயணித்திருக்கிறேன்.
பயோனியர் கொட்டகையில் படம் பார்த்திருக்கிறேன்.
பயோனியர் விடுதியில் தங்கியிருக்கிறேன்.
பயோனியர் கல்லூரியில் படித்திருக்கிறேன்.

எனது குறுகிய குமரி மாவட்ட வாழ்க்கைப் பயணத்தில் இவைகள் நான் பயோனியர் குழுமத்திடமிருந்து பெற்றுக்கொண்டவை. ஒரு நுகர்வோராகப் பெற்றிருந்தாலும் எனது அருகிலுள்ள அதிபரின் வாடிக்கையாளர் என்பதில் நான் ஆனந்தப்படுகிறேன்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலங்களில் அடிப்படை சமூகக் கட்டமைப்பு மிகக் குறைவு. மக்களுக்கு பயன்படும் சமூகக் கட்டமைப்புகளை நிலைநாட்டுவதில், முதலீடு செய்து அதன்மூலம் வருவாய் பெருக்கி, அதை மக்களுக்கு மீண்டுமாய் பயன்படுத்தும் ஒரு “பயோனியர்” ஆக குமரி மாவட்டத்தில் வாழ்ந்தவர் இவர்.

இந்த முன்னோடி மனிதர் பற்றிய அரிய தகவல்களைத் திரட்டி இருபத்தோராம் நூற்றாண்டு மக்களுக்கு செய்தியாகவும் படிப்பினையாகவும் அமையும்வண்ணம் நூல் வடிவம் கொடுத்த திருத்தமிழ்த்தேவனாரின் இந்நூலை வெளியிடுவதில் பேரானந்தம் கொள்கிறேன்.

**யகுதின் திவாகர்,**
நெய்தல்வெளி, நாகர்கோயில்.



# சாதனை மனிதர்களின் சரித்திரமே மண்ணுக்கான பெருமை

கன்னியாகுமரி மாவட்டத்தைச் சார்ந்த பயோனியர் குமாரசாமி வரலாற்று நாயகனாக வாழ்ந்திருக்கிறார் என்றால் அது நமக்குக் கிடைத்த பெருமையாகும். அவர் எங்கள் மாவட்டத்தைச் சார்ந்தவர் என பெருமைப்பட சொல்வதற்கு நமக்குக் கிடைத்த வாய்ப்பாகும். அப்படிப்பட்ட பயோனியரை எத்தனை பேருக்குத் தெரியும் என்பது கேள்விக்குறியே.

நாகர்கோவில் வேப்பமூடு சந்திப்பு அருகிலுள்ள அலெக்சாண்டர் அச்சகச் சாலையில் தமிழ்வானம் சுரேசை சந்தித்தேன். அச்சாலையில் அவர் பழைய நூல்களை விற்பனை செய்து கொண்டிருந்தார். அவர், எனது ஆர்வத்திற்கு ஏற்றவாறு பழைய புத்தகங்கள் வந்தால் எனக்கு கொடுப்பார். நானும் அதற்குரிய விலையைக் கொடுத்து வாங்கிச் செல்வேன். அவ்வாறு, அவர் கடைக்குச் சென்றபோது இரா. ஆண்டி மற்றும் வை. சுப்பிரமணியன் எழுதிய '**குமரித் தந்த தொழில் மேதை**' என்கிற பழைய புத்தகம் ஒன்றினைத் தந்தார். நானும் வாங்கிச் சென்றேன். அதனைப் படித்தபோது அவரைக் குறித்து இன்னும் தெரிந்துகொள்ள வேண்டும் என்கிற ஆவல் எனக்குள் ஏற்பட்டது.

மறுநாள், அவருடைய கடைக்குச் சென்று, "புத்தகம் ரெம்ப பயனுள்ளதாக இருந்தது. அதில் முழுமையான செய்தி இல்லையே. அவரைப் பற்றி வேறு ஏதாவது புத்தகம் உள்ளதா?" எனக் கேட்டேன். அதற்கு அவர், "ஒரு நூற்றாண்டு மலர் ஒன்று உள்ளது. அதனை விற்பனைக்குத் தர முடியாது. அது, எனக்குத் தேவை. உங்களுக்கு வேண்டுமானால் வாசிக்கத் தருகிறேன்" என்றார். மறுநாள் நூற்றாண்டு மலரை எனக்குக் கொடுத்தார். அதில், பலர் எழுதிய கட்டுரைகள் தமிழிலும் ஆங்கிலத்திலும் இடம் பெற்றிருந்தன. அவரவர்க்குத் தெரிந்ததை ஆங்காங்கே குறிப்பிட்டிருந்தார்கள்.

பயோனியரைப் பற்றி நண்பர்கள் வட்டத்திலும், இலக்கிய வட்டத்திலும் பலரிடம் பேசினேன். அவரைப் பற்றிய செய்திகளோ, அவர் நிகழ்த்திய சாதனைகளோ பலருக்கும் சரியாகத் தெரியவில்லை. செந்தமிழ் அருள்நெறிப் பேரவைத் தலைவர் புலவர் ராமசாமி, பயோனியர் கிழங்கு குறித்து பெருமைப்பட பேசினார். கொடிக்கால் சேக் அப்துல்லா, அவர் கண்டதை என்னோடு பகிர்ந்து கொண்டார். தாமசு ஆல்வா எடிசன், கென்றி ஃபோர்டு போன்றவர்களைப் பற்றியெல்லாம் படிக்கிறோம். நமக்கு அருகில் வாழ்ந்து சாதனை படைத்துச் சென்ற பயோனியரின் வாழ்க்கை நமக்குத் தெரியவில்லை என்பது மண்ணின் பெருமையை இழப்பதாகும்.

பயோனியரைப் பற்றி நான் வாசித்தபோது அவருடைய வாழ்க்கை எனக்குள் ஒரு புதிய உத்வேகத்தைக் கொடுத்தது. குறிப்பாக அவருடைய வாழ்க்கை வரலாறை மாணவர்கள் இளமைப் பருவத்திலே வாசிக்க வேண்டும். உலகில், மனிதர்கள் பிறக்கிறார்கள்; இறக்கிறார்கள். சிலர் மட்டுமே வரலாற்றில் இடம் பிடிக்கிறார்கள். அவ்வகையில், வரலாற்றில் இடம்பெற்ற அம்மாமனிதரின் வாழ்வு வாசிக்கின்றவர்களுக்கு ஒரு ஊன்றுகோலாக இருக்கும் என்பதால் அதனை ஒரு நூலாக எழுதிவிடத் தீர்மானித்தேன். இந்நூலை எழுதிட மிகவும் ஊன்றுகோலாக இருந்தது மேலே சொன்ன இரண்டு நூல்களுமே என்றால் மிகையாகாது.

ஒரு அரசன் செய்ய முடியாததை தனிமனிதராக நின்று சாதித்தவர் பயோனியர். அவரின் சொத்துக்களான பேருந்துகள், மின் நிலையம், வங்கி, தொழில்பயிற்சிப் பள்ளி ஆகியவை நாட்டுடமை ஆக்கப்பட்டபோதும் மனம் தளராமல் ஒரு முன்மாதிரி மனிதராக வாழ்ந்திருக்கிறார் பயோனியர். தனக்கு உதவி செய்தவர்களுக்கு எந்தவகையிலாவது உதவி செய்வது என்கிற சிறந்த குணத்தை உடையவராக இருந்திருக்கிறார். அரசியல் சூழ்ச்சிகளால் இப்படிப்பட்ட சாதனை மனிதர்களை நமது அரசும், நமது மாவட்டமும் நினைத்துப் பார்ப்பதில்லை. பயோனியர், இந்திய விடுதலை போராட்டத்தில் மறைமுகமாக பங்கெடுத்தவர். அதுபற்றிய செய்தியை இப்பொழுது ஆதாரத்துடன் அறிய முடியவில்லை. சாதித்

தலைவர்களுக்கு எல்லாம் சிலை வைக்கும் அரசு இப்படிப்பட்ட மனிதர்களின் திருவுருவச் சிலைகளை வைத்து மாவட்டத்திற்கு பெருமை சேர்க்க வேண்டும். இவரைப் போன்ற மனிதர்கள்தான் சமூகத்திற்கு தேவை. இந்நூல் அப்படிப்பட்ட மனிதர்களை உருவாக்கும் என்கிற நம்பிக்கை உள்ளது.

திருத்தமிழ்த்தேவனார்,
தெற்கு எழுத்தாளர் இயக்கம்,
நாகர்கோவில்.

# உள்ளே . . .

**1**

# பயோனியரின் இளமைப் பருவம்

கேரள மாநிலத்தின் தென்பகுதியையும் தமிழகத்தின் தென் பகுதியையும் உள்ளடக்கிய செல்வச் செழிப்பான ஓர் நாடு திருவிதாங்கூர் நாடு ஆகும். தொடக்கத்தில் திருவிதாங்கோடும், பின்பு கல்குளமும் இந்நாட்டின் தலைநகரமாக இருந்தன.

சேர மன்னன் சேரமான் பெருமாள் கி.பி. 789–825 வரை வேணாட்டை ஆட்சிசெய்து வந்தார். வேணாட்டின் கடைசி மன்னர் பால மார்த்தாண்ட வர்மா (கி.பி. 1728–1758) மர்மமான முறையில் மரணமடைந்த நிலையில் மலபார் பகுதியை ஆண்ட நம்பூதிரி – நாயர் கூட்டணி வேணாட்டு அரசைக் கைப்பற்றியது. இதன்முதல் கார்த்திகைத் திருநாள் இராமவர்மன் மன்னரானார். இவர் காலத்தில்தான் வேணாடு என்ற நாடு திருவிதாங்கூர் என்கிற பெயரில் செயல்படத் துவங்கியது. தலைநகரமாக இருந்த கல்குளம் திருவனந்தபுரத்திற்கு மாற்றப்பட்டது.

திருகார்த்திகைத் திருநாள் (1758–1798) காலத்திற்குப் பின் 1798இல் திருபாலராம வர்மா மன்னரானார். 1802இல் வேலுத்தம்பி திவானாக பதவி பெற்றார். ஆங்கிலேயர்களுடன் ஏற்பட்ட போரில் வேலுத்தம்பி தோற்கடிக்கப்பட்டார். 1810இல் இராணி கெளரி இலட்சுமிபாய் ஆங்கிலேயரின் ஆசியுடன் மன்னரானார். 1813இல், அவரது மகன் மன்னராக பிரகடனப்படுத்தப்பட்டார். அடுத்ததாக திருசுவாதி திருநாள் இராமவர்மா (1829–1846) ஆட்சி செய்தார். அடுத்ததாக, மன்னர் உத்திராடம் திருமால் மார்த்தாண்ட வர்மா (1847–1860) ஆட்சி செய்தார். அடுத்ததாக, திருமூலம் திருநாள் திருஇராமவர்மா 1885–1924) ஆட்சி செய்தார். இவருடைய காலத்தில் கல்லூரிகளும் பள்ளிக்கூடங்களும் நிறுவப்பட்டன. பெண்களும் கல்வி கற்க அனுமதிக்கப்பட்டனர். இராமவர்மாவின் மரணத்திற்குப் பிறகு சேதுலெட்சுமிபாய் (1924–1931) ஆட்சி செய்தார்.

திருமூலம் திருநாள் இராமவர்மாவிற்குப் பின்னர் சேதுலட்சுமிபாய் 1924 முதல் 1931 வரை ஆட்சி செய்தார். இவர் 12.11.1936ஆம் நாள், இந்துக்கள் அனைவரும் கோயிலில் நுழைந்து கடவுளை வணங்கிட அதிகார பூர்வமாக ஆணை பிறப்பித்தார்.

தமிழின் குழந்தையாய் பிறந்த மலையாளம், தாயோடு மழலைச் சொல் பேசியது மட்டுமின்றி, தன் பெயரிலே புதுமொழி ஒன்றினையும் அறிமுகப்படுத்திக்கொண்டது. அப்பொழுது, இப் பகுதியின் தலைநகரம் திருவனந்தபுரம் ஆகும். இத்தலைநகரை, ‘என்றும் பசுமைமாறா நகரம்’ என காந்தி குறிப்பிட்டார். தமிழ்ச் சொற்களான, திரு + அனந்தம் + புரம் ஆகியப் பதங்களின் இணைப்பே ‘திருவனந்தபுரம்’ என அழைக்கப்படுகிறது. இது, கடவுளின் சொந்த தேசம் என்று அறியப்படுகிறது. அந்த தேசத்தின் ஒரு பகுதிதான் கன்னியாகுமரி மாவட்டம். தற்பொழுது இம் மாவட்டம் தமிழகத்தோடு உள்ளது.

திருவிதாங்கூர் நாட்டில், பல மதத்தவரும், பல சாதியினரும் வாழ்ந்து வருகிறார்கள். ஒவ்வொரு சாதியினரும் ஒவ்வொரு தொழிலை குலத் தொழிலாகக் கொண்டிருந்தனர். நெசவுத் தொழிலை குலத் தொழிலாகக் கொண்டவர்கள் சாலிய சமூகத்தைச் சார்ந்தவர்கள். அச்சமூகத்தில் வாழ்ந்த சாசுதா மற்றும் சிவகாமி தம்பதியருக்கு 12 அக்டோபர் 1897 அன்று மூத்த மகனாகப் பிறந்தவர் குமாரசாமி. இவருக்குப் பிறகு நெல்லையப்பன் மற்றும் நாகமணி ஆகிய இரு சகோதரர்களும், இலக்குமி மற்றும் செந்தி ஆகிய இரு சகோதரி களும் பிறந்தனர். அவர்களுக்கு ஒரு சிறிய வீடு இருந்தது. அந்த இடத்தில்தான் இப்பொழுது பேபி இராமகிருசுணா பவன் உள்ளது. அன்றைக்கு இவருடைய குடும்பம் மிக வறுமையில் வாடிய குடும்பம். இவர்களுடைய பூர்வீகம் வடசேரி ஆகும்.

குமாரசாமியின் வீட்டில் நிலவிய வறுமை, குமாரசாமியின் கல்விப் படிப்பை நான்காம் வகுப்பிற்குமேல் தொடர அனுமதிக்கவில்லை. அதனால், கல்விப் படிப்பை நிறுத்திவிட்டு மரக்கடையில் கூலி வேலைக்குச் சேர்ந்தார். உழைப்புக்கு ஏற்ப சரியான கூலி கிடைக்காததால் மருந்துக் கடை, நூல் கடை என பல கடைகளில் வேலை செய்தார். எந்தவொரு வேலையும் அவருக்குத் திருப்தி

கரமான சம்பளத்தை அளிக்கவில்லை. அதனால் அவர் எங்கும் நிரந்தரமாகப் பணி செய்ய இயலவில்லை.

அவரது வீட்டில் நிலவிய வறுமை மென்மேலும் அவரை ஆழமாகச் சிந்திக்கவும் முடிவெடுக்கவும் தூண்டியது. சம்பாதிக்க வேண்டும், வீட்டில் நிலவும் வறுமையை அகற்ற வேண்டும், பெற்றோரை மகிழ்ச்சியாக வைக்க வேண்டும் என்கிற ஒரே நோக்கத்திற்காக சென்னை சென்றுவிடத் திட்டமிட்டார். அன்றைய காலகட்டத்தில் சென்னை என்பது வெளிநாட்டிற்கு செல்வது போன்றதாகும்.

சென்னை சென்றால், ஏதாவது ஒரு வேலை கிடைக்கும்; கை நிறைய சம்பளம் கிடைக்கும் என்பது அன்றைய இளைஞர்களின் நம்பிக்கையாக இருந்தது. அவருடைய தாய், தன்னுடைய தங்கக் காப்பு ஒன்றினை கணவனுக்குத் தெரியாமல் விற்று மகனை சென்னைக்கு அனுப்பி வைக்க சம்மதம் தெரிவித்தார். குமாரசாமி கிளம்பும்போது அருடைய தாய் அவருக்கு ஆசீர் வழங்கி கண்ணீர் மல்க வழியனுப்பி வைத்தார். மகன் சென்னை செல்வது அவருடைய தந்தைக்கு விருப்பமில்லாமல் இருந்தது. மகன் சென்னைக்கு செல்கிறான் என்பதை அறிந்த அவருடைய தகப்பனார் அவனை பேருந்து நிலையத்திலே பிடித்து நிறுத்திவிட வேண்டுமென ஓடிவந்தார். அவர் பேருந்து நிலையத்திற்குள் நுழைவதற்கு முன்பாகவே வாகனம் சென்னைக்கு கிளம்பிவிட்டது. அப்பொழுது குமாரசாமிக்கு வயது பதினான்கு.

சென்னையில் வேலை தேடி அலைந்து திரிந்த குமாரசாமிக்கு வேலை எதுவும் கிடைக்கவில்லை. இரவு நேரத்தில் கோவில் வராந்தாவில் முனிவர்களைப்போல் படுத்துக்கொள்வார். சென்னையில் அவருக்கு உதவி செய்வதற்குத் தெரிந்தவர்கள் யாரும் இல்லை. பல வாசல்களைத் தட்டியும் வேலைக்கான கதவு திறக்கப்படவில்லை. நாட்கள் நகர்ந்து கொண்டிருந்தது. கையி லிருந்த காசும் கரைந்துபோனது. பசி, வயிறைக் கொத்தித் தின்னத் துவங்கியது. நம்பிக்கை இழந்த நிலையில், சாலையோரத்தில் நடைபிணமாய் நடந்து கொண்டிருந்தார். அப்பொழுது, கடவுளே வழியனுப்பியது போன்று அப்பாதை வழியாக சென்னை பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணி செய்து கொண்டிருந்த

கே.என். சிவராசபிள்ளை நடந்து வந்து கொண்டிருந்தார். அவர், கன்னியாகுமரி மாவட்டத்தைச் சார்ந்தவர். குமாரசாமியின் வேட்டி கட்டிய தோரணையைப் பார்த்து, அவரை நிறுத்தி நலம் விசாரித்தார்.

அன்றைய காலகட்டத்தில், அரை கால்நிக்கர் அறிமுகம் ஆக வில்லை. பள்ளிக்கூடம் செல்லும் மாணவர்கள் சிறிய வேட்டி கட்டி யிருந்தனர். அப்படியே குமாரசாமியும் சிறிய வேட்டியே கட்டி யிருந்தார். அவரின் சோகக் கதையைக் கேட்ட பேராசிரியர் கே.என். சிவராசபிள்ளை, அவருடைய வீட்டிற்கு அவரை அழைத்துச் சென்றார். அவரது வீட்டாரும் நலம் விசாரித்தனர். அவர்களின் உரை யாடல் குமாரசாமிக்கு மிகுந்த ஆறுதலாக அமைந்தது. மனநிறைவு கொண்டார். குமாரசாமியின் மனதில் அமுங்கிக் கிடந்த சோகம் கொஞ்சம் கொஞ்சமாக விலகத் துவங்கியது. ஓர் நம்பிக்கை விதை மனதிற்குள் உயிர்த்தெழுந்தது. ஆழ்மனதில், கடவுளுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டார்.

கே.என். சிவராசபிள்ளை, அடிசன் போக்குவரத்து பணிமனையில் குமாரசாமிக்கு வேலை வாங்கிக் கொடுத்தார். அதில் அவர் கம்மியராக வேலை பார்த்தார். அங்கு வேலை செய்த பிற தொழி லாளிகள் மத்தியில் நம்பகத்தன்மை உடையவராக மாறினார். சில நாட்களிலே வாகனங்களை பழுதுபார்ப்பதற்கான வாய்ப்பு கிடைத்தது. அதிலுள்ள நுணுக்கங்களை கற்றுத்தேர்ந்தார். சரி செய்த வாகனங்களை இயக்கவும் ஓட்டவும் வாய்ப்பு கிடைத்தபோது அதனை ஓட்டியும் பழகினார். மேலும், அதற்கான ஓட்டுநர் உரிமத்தைப் பெற விரும்பினார். வாகனம் ஓட்டுவதற்கான உரிமம் பெறவேண்டும் என்றால் வயது பதினெட்டு நிரம்பியிருக்க வேண்டும் என்பது விதிமுறை. குமாரசாமிக்கு அப்பொழுது வயது பதினேழு. இருப்பினும், அவருக்கு வாகன உரிமம் கிடைப்பதற்கு கே.என். சிவராசபிள்ளை உதவி செய்தார்.

ஓட்டுநர் உரிமம் கிடைத்ததிலிருந்து குமாரசாமி மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். இனி ஊருக்கு திரும்பி அங்கேயே வேலை செய்யலாம் என்கிற முடிவுக்கு வந்தார். மூன்று ஆண்டுகளுக்குப் பின்பு ஊர் திரும்பிய குமாரசாமியைக் கண்டு அவரது தகப்பனார் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்.

2

# பயோனியர் பேருந்து சேவைகள்

அன்றைய காலக்கட்டத்தில், ஏழைகள் மாட்டு வண்டிகளிலும் வசதியானவர்கள் குதிரை வண்டிகளிலும் பயணம் செய்து கொண்டிருந்தனர். நாகர்கோவிலில் மூன்று வாகனங்கள் மட்டுமே இயங்கிக் கொண்டிருந்தன. அதில் இரண்டு வாகனங்கள் பாலராமபுரம் சங்கரமூர்த்தியிடம் இருந்தது. அவ்வாகனம், லட்சுமி விலாசம் என்கிற பெயரில் நாகர்கோவிலில் இருந்து திருவனந்தபுரம் வரை பயணிகளை ஏற்றிச் சென்று வந்தது. அப்பேருந்தில் எட்டுபேர் மட்டுமே பயணம் செய்ய முடியும். அதில், பேருந்து ஓட்டுநருக்கான வேலை குமாரசாமிக்கு கிடைத்தது. குமாரசாமி மகிழ்ச்சி அடைந்தார். இருப்பினும், வாகன உரிமையாளர் சங்கரமூர்த்திக்கு கடன் சுமை அதிகரித்துக் கொண்டிருந்தது. இதனால் தன்னிடம் இருந்த ஒரு வாகனத்தை விற்றுவிட முடிவு செய்தார். அந்த வாகனத்தை வாங்குவதற்கு குமாரசாமி முயற்சி செய்தார்.

தனது நண்பர் கமீது சாகிப் என்ற முகம்மது முத்தபாவின் உதவியுடன் தன்னிடம் இருந்த சேமிப்பையும் கொண்டு 1920இல் ஆயிரம் ரூபாய்க்கு அப்பேருந்தினை குமாரசாமி விலைக்கு வாங்கினார். அதனை, “சேம்பியன் பேருந்து நிறுவனம்” என்ற பெயரில் நாகர்கோவிலிலிருந்து திருவனந்தபுரத்திற்கு ஓட்டினார். அது அடிக்கடி பழுதானதால் அதில் போதிய வருமானம் கிடைக்க வில்லை. ஆகவே, அந்த வாகனத்தை விற்றுவிட்டார். அதன்பிறகு, திருவனந்தபுரத்திலுள்ள சுங்கவரி ஆணையர் கொச்சுராமன் பிள்ளையிடம் ஓட்டுநராகப் பணிக்குச் சேர்ந்தார். அவருடைய உத்தரவுக்கு அடிபணிந்து வேலை செய்தார். அவருடைய நன் மதிப்பைப் பெற்றார். குமாரசாமியின் குடும்ப சூழ்நிலையை அவர் அறிந்து வைத்திருந்தார். அதன்காரணமாக, மேல்நாட்டு மது விற்கும் உரிமத்தை குமாரசாமிக்கு கொச்சுராமன்பிள்ளை வாங்கிக்

கொடுத்தார். அதனை விற்பனை செய்வதற்கு வசதியாக 1917இல் நாகர்கோவிலில் இருந்த அவரது தகப்பனார் கடையை மதுபான மளிகைக் கடையாக மாற்றினார். அதில் ஓரளவுக்கு நல்ல வருமானம் குமாரசாமிக்கு கிடைத்தது.

மதுபானக் கடையில் கிடைத்த வருமானம் மற்றும் தனக்குக் கிடைத்த சம்பளம் ஆகியவற்றைக் கொண்டு மீண்டும் பழைய பேருந்து ஒன்றினை வாங்கினார். அந்த வாகனத்திற்கு “பயோனியர்” எனப் பெயரிட்டார். அப்பேருந்தை நாகர்கோவிலி லிருந்து திருவனந்தபுரத்திற்கு இயக்கினார். அவற்றின்மூலம் கிடைத்த வருமானத்தில் ஆறு புதிய பேருந்துகளை வாங்கினார். இதனால் அவர், “பயோனியர்” என பெருமையுடன் அறியப்பட்டார். “பயோனியர்” என்றால், “முன்சென்று வழி செய்வோர்” அல்லது “முன்னோடி” என்று பொருள்.

அவர், பேருந்தில் ஓட்டுநராக பணியாற்றியபோது பாலராமபுரத்தைச் சார்ந்த நாகம்மாள் என்ற பெண்ணைப் பார்த்தார். “எண்ணரும் நலத்தினாள் இணயள் நின்றுழிக் கண்ணோடு கண்ணினைக் கவ்வி ஒன்றை ஒன்று உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்” என்பதற்கு இணங்க அவர்கள் பார்வை காதலை பரிமாறிக் கொண்டது. அப்பெண்ணின் பெற்றோர் சம்மதத்துடன் திருமணம் செய்து கொள்ள விரும்பினார். தன் விருப்பத்தை பெற்றோரிடம் தெரி வித்தார். அவர்களும் தன் மகனின் விருப்பத்தை நிறைவேற்றிட பெண் கேட்டுச் சென்றனர். அப்பெண், செல்வச் செழிப்பான மற்றும் மிகுந்த கௌரவமான குடும்பத்தைச் சார்ந்தவர் என்பதால் பெண்ணின் வீட்டார் திருமணத்திற்கு மறுப்புத் தெரிவித்தனர்.

பெண் வீட்டாரிடம் பல பெரியோர்கள் பேசிய பின்பாக மனம் மாறிய அவர்கள் திருமணத்திற்கு சம்மதம் தெரிவித்தனர். குமாரசாமியின் திருமணம் 1922இல் நடைபெற்றது. ஆனால், அவர்களுடைய திருமணம் காதல் திருமணம் அல்ல என்கிறார் சாத்தா. திருமணத்தின்போது பெண் வீட்டாரிடம் பணம் எதுவும் பெறப்பட வில்லை. அதேவேளையில், அதிகளவு நகைகளை அவள்

கொண்டுவந்தாள். அப்பொழுது குமாரசாமிக்கு வயது இருபத்தி ஐந்து. குமராசாமிக்கும், அவருடைய தம்பி நெல்லையப்பனுக்கும் ஒரேநாளில் ஒரேமேடையில் வைத்துத்தான் திருமணம் நடைபெற்றது.

குமாரசாமியின் மனைவி, அவளுடைய நகைகளை பல வேளை களில் அடகுவைத்து கணவரின் வியாபாரம் மேம்பட உதவி நல்கினாள். அவர்களுக்கு பகவதியம்மாள், கிருசுணம்மாள், தங்கம் மாள், இராசம்மாள், இராமகிருசுணா என ஐந்து பெண் குழந்தைகள் பிறந்தனர். குமாரசாமியின் வாழ்க்கை மற்றும் தொழில் முன்னேற்றத் திற்கு அவரது மனைவி நாகம்மாள் மிகவும் உறுதுணையாக இருந்தார்.

பயோனியர், சாதாரணமானதொரு வாழ்க்கையை வாழ்ந்தார். காலையில் பழைய கஞ்சி குடிப்பார். வெள்ளை வேட்டி, வெள்ளை சட்டை அணிந்திருப்பார். தோளில் ஒரு தொவர்த்து போட்டிருப்பார். மிகுந்த கடவுள் நம்பிக்கை உடையவர். ஒவ்வொருநாளும் பிரார்த்தனைக்குப் பின்புதான் உணவை உட்கொள்வார்.

பயோனியர் பேருந்து நிறுவனம் மணிமேடை அருகே செயல்பட்டு வந்தது. பதினெட்டு வருடங்கள் குமரி மாவட்ட மக்களின் நலனுக் காக பயோனியர் பேருந்து சேவை நாகர்கோவிலை மையமாக வைத்து திருவனந்தபுரம், கன்னியாகுமரி, மணக்குடி, முட்டம், குளச்சல், தக்கலை, தொடுவெட்டி ஆகிய இடங்களுக்கு இயக்கப்பட்டது.

சுமார் இருநூற்றி நாற்பது பேருந்துகள் பயோனியரின் கட்டுப்பாட்டில் இருந்தன. அதில், நூறு பேருந்துகள் பயோனியர் பெயரில் ஓடின. ehf ®nf hé š ef uh£Á x› bt hU ngUªÂ%F « 2 r¡ f u« (1¼ பைசா) வரி வசூலித்து வந்தது. பேருந்துகளை பழுது பார்ப்பதற்காக வேண்டி பணிமனை ஒன்றினை பயோனியர் துவக்கினார். நாளடைவில் அது தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்கும் ஒரு தொழில் பட்டறையாகவே மாறியது.

மதுவினால் மக்களுக்கு உடல்நலக் கோளாறுகள் ஏற்படுகிறது. பல குடும்பங்களில் பிரச்சனைகள் ஏற்பட வழி வகுக்கிறது என்பதனை பயோனியர் குமாரசாமி உணர்ந்தார். மதுவினால் கிடைக்கிற கேடான வருமானம் இனிமேல் தேவையில்லை என பயோனியர் கருதினார். பொதுமக்களின் நலனுக்காகவும், குடும்பங்களின் நன்மைக்காகவும் வேண்டி அவருடைய மதுக்கடையை மூடிவிட்டார். வருமானமுள்ள தொழிலை இப்படி கைவிடலாமா என சிலர் கிண்டல் செய்தனர்.

ஒருநாள், பணிமனையில் வேலைபார்க்கும் மேற்பார்வையாளர் ஒருவர் சுருள் தயார்செய்யும் சக தொழிலாளி மாதவன்பிள்ளை என்பவரை வேலையிலிருந்து நீக்க வேண்டுமென கோரிக்கை வைத்தார். அக்கோரிக்கையை அப்படியே ஏற்றுக்கொள்ளாமல் அதுகுறித்து பயோனியர் விசாரித்தார். மாதவன் பிள்ளையை அழைத்து விவரத்தைக் கேட்டறிந்தார். மாதவன் பிள்ளையிடம் தவறில்லை என்பதனை அறிந்தார். மேற்பார்வையாளரை அழைத்து, வேலைப்பளு அதிகமாக இருந்தால் தொழிலாளிக்கு கோபம் வரத்தான் செய்யும். அவர்களிடம் நல்ல முறையில் பேசி பரிவாக நடந்துகொள்ள வேண்டும். தொழிலாளர்களை சமாளித்து வேலை வாங்கக் கற்றுக்கொள்ள வேண்டும் என அறிவுரை வழங்கினார். தொழிலாளர் விசயத்தில் யார் எந்தவொரு குற்றச்சாட்டை முன்வைத்தாலும் தீர விசாரிக்காமல் யாரையும் வேலையை விட்டு நீக்கமாட்டார். அவர்களுக்கு அறிவுரை வழங்கி வேலை செய்ய உற்சாகப்படுத்துவார்.

1930ஆம் ஆண்டு வாகனச் சேவையின் கிளைகளை திருவனந்த புரம், நாங்குநேரி, தக்கலை, தொடுவெட்டி ஆகிய பகுதிகளில் அமைத்தார் பயோனியர். குமரிவாழ் மக்களுக்கு மட்டுமின்றி தென் திருவிதாங்கூர் நாடு கடந்தும் பேருந்து சேவையைச் செய்தார். தனக்கு கிடைத்த இலாபத்தைக்கொண்டு இன்னும் பல பேருந்துகள் வாங்கி பல ஊர்களுக்கு பேருந்து சேவை கிடைத்திட வழிவகை செய்தார். அப்பொழுது அரசுப் பேருந்துகள் கிடையாது. டயர்கள் பழுதுபடாமல் இருப்பதற்கு பேருந்து செல்லும் சாலைகளில்

இரும்புத் துண்டுகள் அல்லது லாடங்கள் கிடந்தால் அதனை அப்புறப்படுத்த ஆட்களை நியமித்தார்.

பயோனியர், **1932**இல் திருவனந்தபுரத்தில் "பிரின்சு போக்குவரத்து" என்கிற பெயரில் நகரப் பேருந்து சேவையைத் துவக்கினார். தென்இந்தியாவில் நகரப் பேருந்தினை முதன்முதலில் துவங்கிய பெருமை பயோனியரையே சாரும். பாவலரின் தமிழ் புலமையைக் கண்டு வியந்த பயோனியர், சதாவதானி செய்குதம்பி பாவலருக்கு இலவச பேருந்து சேவை வழங்கினார். முதன்முதலில் தமிழ் புலவர் ஒருவருக்கு இலவச பேருந்து சேவை வழங்கிய பெருமையும் பயோனியரைத்தான் சேரும்.

பயோனியரின் வளர்ச்சியை கண்ட காவல்துறை பலவகைகளில் அவரிடமிருந்து இலஞ்சம் பெற முயற்சி செய்தது. அதற்கு இடம் கொடுக்காத பயோனியர்மீது பல வகைகளில் இடையூறுகளை ஏற்படுத்தினர். சுமார் ஐம்பதுக்கு மேற்பட்ட பொய் வழக்குகள் புனையப்பட்டன. பயோனியரின் பொன்னான நேரம், நீதிமன்றத்தில் வீணடிக்கப்பட்டது.

வழக்குகள் நடைபெற்று கொண்டிருக்கும்போது, காவல்துறை ஆணையர் கண்ணிங்காம் என்கிற ஆங்கிலேயன் தனது இலாகா சம்பந்தமாக பார்வையிடுவதற்கு நாகர்கோவில் வந்தார். பயோனியர் அவரை சந்தித்து, அவர்மீது சுமத்தப்பட்ட வழக்குகள் சம்பந்தமாக முறையிட்டார். உண்மையை அறிந்த ஆணையர், காவல்துறை அதிகாரிகளை அழைத்து வன்மையாகக் கண்டித்தார். வழக்குகள் அனைத்தையும் உடனடியாகத் திரும்பப் பெற உத்தரவு பிறப்பித்தார். பயோனியர் ஓர் நேர்மையான நபராக வாழ்ந்து வந்தார். தன்னால் முடிந்த உதவிகளை ஏழைகளுக்கு செய்தாரே தவிர, அவர் ஒருபோதும் இலஞ்சம் கொடுக்க முன்வரவில்லை. யாருக்கும் அடிபணியவும் இல்லை.

ஒருதடவை, பயோனியர் பேருந்து மூன்றடைப்பு பகுதியில் கருணாகரப் பாண்டியனின் குழந்தைமீது மோதியதில் சம்பவ இடத்திலேயே அக்குழந்தை உயிரிழந்தது. ஊர் மக்கள் வெகுண்டு எழுந்தனர். வாகனத்தை அடித்து உடைத்தனர். மக்கள், சாலை

மறியலில் ஈடுபட்டனர். இச்சம்பவத்தை கேள்விப்பட்ட பயோனியர், உடனடியாக தனது தம்பி நெல்லையப்பன் என்பவரை சம்பவ இடத்திற்கு விரைந்து செல்லுமாறு பணித்தார். அங்கு சென்று, பாதிக்கப்பட்ட குடும்பத்தாருக்கு ஆறுதல் சொல்லவும் சமாதானம் பேசவும் வேண்டினார். கோபத்தில் கம்புகளோடும் ஆயுதங் களோடும் நின்ற மக்களைச் சந்தித்தார். நடந்த சம்பவத்திற்கு வருத்தம் தெரிவித்தார். குழந்தையின் தகப்பனாரைச் சந்தித்து ஆறுதல் கூறினார். அவருடைய நிலைமையைக் கேட்டறிந்தார். குறிப்பிட்ட ஒரு தொகையைச் செலவுக்குக் கொடுத்தார். பேருந்து நிறுவனத்தில் அவருக்கு வேலையும் கொடுத்து உதவினார். இன்றைக்கு இப்படியானதொரு காரியத்தை அரசுகூட செய்வ தில்லை. பயோனியர், அன்றைக்கு அப்படி ஒரு காரியத்தை மிகுந்த மரியாதையோடும் மனிதாபத்தோடும் செய்திருக்கிறார்.

ஒருநாள், காலையில் மணக்குடி பேருந்தில் பயணிகள் ஏறி உட்கார்ந்து இருந்தனர். பேருந்து புறப்படும் நேரத்தில், ஓட்டுநர் பயணிகளிடம் வந்து பேருந்தில் பழுது ஏற்படுள்ளது. அதனால் பேருந்தை இயக்க இயலாது எனக் கூறிவிட்டார். பயணிகள் சிலருக்கு அவசரமாக ஊருக்கும், சிலருக்கு குறிப்பிட்ட நேரத்தில் பணிகளுக்கும் செல்ல வேண்டியிருந்தது. அப்பொழுது அங்கே வந்த பயோனியர், பேருந்து ஓட்டுநரிடம் என்ன பிரச்சனை என வினவினார். விடயத்தைக் கேட்டுவிட்டுப் பேருந்துன்கீழ் குனிந்து உடனடியாகப் பழுது பார்த்தார். பயணிகளிடம், இப்பொழுது பேருந்தில் ஏறுங்கள் என்றார். ஓட்டுநரிடம், பேருந்து புறப்படலாம் என்றார். பேருந்தில் ஏறிய ஓட்டுநர் மீண்டும் பழுது சரியாகவில்லை; பேருந்தை இயக்க இயலவில்லை என்றார். உடனடியாக பயோனியர் பேருந்தில் ஏறி ஓட்டுநர் இருக்கையில் உட்கார்ந்து பேருந்தை அவரே மணக்குடிக்கு ஓட்டிச் சென்றார். பயணிகள், பயோனியரைப் பாராட்டினர்.

சென்னையிலுள்ள சிம்சன் நிறுவனம் மிகவும் புகழ்பெற்ற நிறுவனம். அவர்களிடம் இருந்த ஓர் இயந்திரம் பழுதாகிவிட்டது. எவ்வளவோ முயன்றும் அவர்களால் சரிசெய்ய முடியவில்லை. அந்த இயந் திரத்தை ஒரு மூலையில் போட்டு வைத்திருந்தனர். பயோனியர்

சென்னை சென்றிருந்தபோது அவரின் பார்வைக்கு அது கொண்டு வரப்பட்டது. சிறிது நேரத்தில் அதனை உற்றுநோக்கிய பயோனியர், அதனை பத்து நிமிடத்திற்குள் சரி செய்து கொடுத்தார். பலநாள் ஓடாத இயந்திரம் பயோனியர் கைபட்டதும் ஓடத் துவங்கியது. அவரை அங்கிருந்தவர்கள், "இவர் உண்மையிலேயே ஓர் அதிசய மனிதர்" எனப் பாராட்டினர்.

பயோனியரின் வளர்ச்சியைக் கண்டு பலர் பொறாமை கொண்டனர். அவ்வகையில், பயோனியர்மீது பொறாமைகொண்ட பேருந்து ஓட்டுநர்கள் சிலர், 'சிண்டிகேட் மோட்டார் சேவை' என்கிற பெயரில் ஒரு குழுமத்தை ஏற்படுத்தினர். அவர்கள், நாகர்கோவில் தாசு அச்சகத்தின் எதிர்புறம் வாடகைக்கு அலுவலகம் ஒன்றினையும் எடுத்தனர். அதன் இயக்குநராக வழக்கறிஞர் கே.எம். பூதலிங்கம் பிள்ளை நியமிக்கப்பட்டார். அவர்கள், தங்களது பேருந்தில் கட்டணத்தைக் குறைத்து பயோனியருக்கு எதிராகப் போட்டியை உருவாக்கினர். இதனால் பயோனியர் பேருந்தில் கூட்டம் குறையத் துவங்கியது. இந்த இக்கட்டான சூழ்நிலையை சமாளிப்பதற்காக பயோனியர் நாகர்கோவிலிலிருந்து திருவனந்தபுரம் செல்ல ஒன்றரை ரூபாயாக இருந்த பயணச்சீட்டை முக்கால் ரூபாயாகக் குறைத்துவிட்டார். அதுபோல், கன்னியாகுமரியில் இருந்து நாகர்கோவில் வருவதற்கு சிண்டிகேட் குழுமத்தினர் பயணச்சீட்டை 20 பைசாவாகக் குறைத்திருந்த நிலையில் பயோனியர் 15 பைசாவாகக் குறைத்தார். சுசீந்திரத்தில் நடந்த திருவிழாவின்போது கட்டணமே வசூலிக்காமல் பயோனியர், அவருடைய பேருந்தை இயக்கினார்.

போட்டியாளர்கள், தாக்குப் பிடிக்க முடியாமல் பயோனியரிடம் சரண் அடைந்தனர். அவர்கள், பயோனியரிடம் சமாதானம் பேசுவதற்கு முன்வந்தனர். இருதரப்பிலும் பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன. எதிர்தரப்பினர் ஏற்றுக்கொள்ளும் அளவிற்கு அவர்களோடு பொறுமையாகப் பேசி ஒப்பந்தம் செய்தார். அவர்களுக்கு வேண்டிய பொருளாதார உதவிகளையும் செய்து கொடுத்தார். இதனால் மேற்படி போட்டியாளர்கள், தங்களுடைய வாகனத்தை பயோனி யரிடம் நாள் ஒன்றிற்கு ரூபாய் இருபத்தி ஒன்றுக்கு வாடகைக்குக்

கொடுத்தனர். வழக்கறிஞர் கே.எம். பூதலிங்கம் பிள்ளை, பயோனியர் குழுமத்தின் புதிய இயக்குநராக நியமிக்கப்பட்டார்.

இவை நடந்து ஒன்பது மாதங்களுக்குள்ளாக 1938இல் திருவிதாங் கூர் மன்னர் போக்குவரத்துச் சேவையை தேசிய மயமாக்கினார். இதுசம்பந்தமாக திவான் சி.பி. இராமசாமி அய்யர் ஒரு கடிதத்தை பயோனியருக்கு அனுப்பினார். அதில், இரண்டு நாட்களுக்குப் பிறகு உங்களுடைய பேருந்துகள் எதுவும் நாகர்கோவில் திருவனந்தபுரம் சாலையில் ஓடக்கூடாது என குறிப்பிட்டிருந்தார். இதைக் கேட்டதும் பயோனியர் மனம் கலங்கினார். இதுகுறித்து திவான் சி.பி. இராமசாமி அய்யரை பயோனியர் நேரில் சந்தித்து பேச்சுவார்த்தை நடத்தினார். அதற்கு இராமசாமி உடன்படவில்லை. இதுகுறித்து பயோனியர் பேசும்போது, “சி.பி. அவர்களிடம் நான் சென்று உத்தரவைப் பின்வாங்கும்படி மன்றாடினேன். அவர்களோ மறுத்து விட்டார்கள்” என்றார்.

நாகர்கோவிலிலில் இருந்து திருவனந்தபுரம் செல்லும் பேருந்து இயக்கத்தை திருவிதாங்கூர் அரசு எடுத்துக்கொண்டது. இந்தியா விலே முதல்முதலில் தனியார் பேருந்தை தேசியமயம் ஆக்கியது திருவிதாங்கூர் அரசுதான். பயோனியர், இழப்பீடு கேட்டு திவானுக்கு கடிதம் எழுதினார். இருப்பினும், இழப்பீட்டுத் தொகை எதுவும் வழங்கப்படவில்லை. தன்னுடைய பேருந்தில் வேலை பார்த்தவர்களுக்கு அரசுப் பேருந்தில் வேலை வழங்கிட பயோனியர் வேண்டினார். அதனையும் திருவிதாங்கூர் அரசு கண்டுகொள்ள வில்லை. படித்த வேலையில்லா பட்டதாரிகளுக்கே நடத்துநர் வேலை வழங்க முடியும் என திவான் அறிவித்தார். அப்பொழுது பயோனியர், ஐந்து லட்சம் ரூபாய் கடன்பட்டிருந்தார்.

வேம்பு அய்யர் என்பவர் பயோனியரிடம் ரூபாய் ஐம்பதாயிரத்தை பேசியபடி உடனடியாகத் திருப்பித் தரும்படி கேட்டுக்கொண்டார். பயோனியர் இத்துடன் திவாலாகி விடுவார் என பலர் பேசிக் கொண்டனர். பயோனியர் ஐந்து நாட்கள் அவரிடம் அவகாசம் கேட்டார். சூழ்நிலையை அறிந்த பயோனியரின் மனைவி, கழுத்தில் கிடந்த காசுமாலையை கழற்றிக் பயோனியரிடம் கொடுத்தார்.

அம்மாலையை பாலாய் மத்திய வங்கியில் அடகுவைத்து பணத்தை வேம்பு அய்யருக்கு கொடுத்தார் பயோனியர்.

அதுபோல், பயோனியரை நெருக்கடிக்கு உள்ளாக்கிய மிட்டா தாரரிடம் கொண்டிருந்த கடனை நிறுவனத்தின் பங்குதாரர்களான பயோனியர் மற்றும் பயோனியரின் தம்பிகள் நெல்லையப்பன், நாகமணி ஆகியோர் ஒரு இலட்சம் வீதம் ரூபாய் மூன்று இலட்சம் கடன்வசதி பெற்று கடத்தினை அடைத்தனர். மேற்படி வங்கிக் கடன் கிடைப்பதற்கு பாலாய் மத்திய வங்கி மேலாளர் சாக்கோ என்பவர் பயோனியருக்கு உதவியாக இருந்தார்.

ஐந்து நாட்கள் கழித்து பயோனியர் தனது பண்ணைக்குச் சென்றார். அங்கு வேலை செய்து கொண்டிருந்த தொழிலாளர்களைச் சந்தித்தார். அவர்கள், பயோனியரின் நிலையை எண்ணி மனம் வருந்தினர். பயோனியரோ அவர்களைப் பார்த்து இதற்கெல்லாம் நாம் கவலைப்படக்கூடாது. நீங்கள் கொஞ்சம் மனது வைத்தால் என்னுடைய கடனை அடைத்துவிட முடியும் என்றார். அதற்கு அவர்கள், “அய்யா நீங்கள் சொல்லுங்க, நாங்கள் செய்கிறோம்” என்றனர். இந்த ஐநூறு ஏக்கர் நிலத்தில் நாம் வாழை நட்டால் ஒரு வருடத்திற்குள் ஐந்து இலட்சம் அல்ல, பத்து இலட்சத்தைக்கூட நம்மால் திருப்பிக் கொடுக்க முடியும் என்றார். தொழிலாளர்களும், உண்மைதான் அய்யா என்றனர். பயோனியரின் விருப்பத்திற்கு ஏற்ப வாழை நடப்பட்டது. அவர்மீது பாசம் கொண்ட தொழிலாளர்கள் மிகக் கடுமையாக உழைத்தார்கள். சொன்னபடியே அனைத்துக் கடன்களையும் பயோனியர் அடைத்து விட்டார்.

பேருந்து மூலம் இழப்புகள் அடைந்த பயோனியர், வாகனங்களை அப்படியே விட்டுவிடவில்லை. சில பேருந்துகளை லாரிகளாக மாற்றினார். சில பேருந்துகளை தமிழகத்தில் இயக்குவதற்கு திருநெல்வேலி மாவட்ட ஆட்சித் தலைவர் வி. இராமகிருசுணா விடம் அனுமதி கோரினார். பயோனியரின் பொதுத் தொண்டுகளை அறிந்திருந்த மாவட்ட ஆட்சியர், நாகர்கோவிலில் இருந்து திருநெல் வேலிக்கு பேருந்து சேவையை செய்வதற்கு பயோனியருக்கு அனுமதி அளித்தார். மேலும், 1953ஆம் ஆண்டு தெற்கு இரயில்வே

போக்குவரத்திற்கு பயணச்சீட்டு வழங்கும் வெளி முகவர் அலுவல கத்தை நாகர்கோவிலில் துவங்க அனுமதி அளித்தார். அப்பொழுது நாகர்கோவிலில் இரயில் போக்குவரத்து கிடையாது. திருநெல்வேலி வரைதான் உண்டு.

பயோனியரின் அலுவலகத்தில் பயணச்சீட்டு பெற்றவர்கள், பயோனி யருக்கு சொந்தமான பயோனியர் பேருந்தில் திருநெல்வேலி சென்று, அங்கிருந்து இரயில் மூலம் சென்னைக்கு பயணித்தனர். பயணிகளின் வசதிக்கேற்ப விரைவு பேருந்துகளை பயோனியர் இயக்கினார். பயோனியரின் வெற்றிக்கு காரணம் பேருந்துகளை சரியான நேரத்தில் இயக்கியதுதான். பயோனியர், தனக்கு உதவி செய்த திருநெல்வேலி ஆட்சித் தலைவருக்கு நன்றி தெரிவிக்கும் விதத்தில் தன்னுடைய கடைசி மகளுக்கு ஆட்சித் தலைவரின் பெயரான இராமகிருசுணா பெயரைச் சூட்டினார்.

பயோனியரின் மேலாளராகவும் செயலாளராகவும் பலகாலம் பணி செய்தவர் நடராசபிள்ளை. அவர், ஐந்தாம் வகுப்பு வரை படித்திருந் தார். தன்னுடைய பதினாறு வயதில் பயோனியரிடம் வேலைக்குச் சேர்ந்தார். பயோனியரின் நம்பிக்கைக்கு உரியவராக இருந்தார். தன்னுடைய முதலாளி மீதுள்ள விசுவாசத்தை வெளிப்படுத்தும் விதத்தில் பயோனியரைப் பின்பற்றி அவருடைய மகனுக்கும் அவ ருடைய வீட்டிற்கும் இராமகிருசுணா என்கிற பெயரைச் சூட்டினார்.

தெற்கு இரயில்வே போக்குவரத்திற்கு பயணச் சீட்டு வழங்கும் வெளிமுகவருக்கான அனுமதி கிடைத்ததற்கு நன்றி தெரிவிக்கும் வகையில் அவருடைய உதவியாளர் வழக்கறிஞர் நாராயணனுடன் முத்துக்கிருசுணனை சந்திப்பதற்கு அவர் தங்கியிருந்த டெல்லி வீட்டிற்கு சென்றார். அப்பொழுது முத்துக்கிருசுணன், பாராளுமன்ற உறுப்பினராகவும் இந்திய தேசிய காங்கிரசு கட்சியின் துணைத் தலைவராகவும் இருந்து வந்தார். அங்கு வருகைதந்த பயோனி யருக்கு அவர் வீட்டிலேயே உணவு பரிமாறப்பட்டது. இரவு உணவுக் குப்பின் பயோனியரை தஞ்சைத் தமிழ் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் முனைவர் வி.ஐ. சுப்பிரமணியனுக்கு முத்துக் கிருசுணன் அறிமுகம் செய்து வைத்தார்.

அவர்கள் உரையாடிக் கொண்டிருந்தபோது அரசாங்கம் இயற்றும் சட்டங்கள் குறித்து பேச்சு எழுந்தது. அப்பொழுது பயோனியர், “அரசு சட்டம் இயற்றும்போது எது நடக்கும், எது நடக்காது என்று வேறுபடுத்தி சட்டம் இயற்ற வேண்டும். தேநீர் குடிப்பது உடலுக்கு நல்லதல்ல எனத் தீர்மானித்து, அதனைத் தடுக்கும் வகையில் சட்டம் இயற்றினால் மனிதர்கள் ஏற்றுக் கொள்வார்களா? நடைமுறையில் ஏற்கக்கூடியதா என்பனவற்றை எல்லாம் தெரிந்த பிறகுதான் சட்டம் இயற்ற வேண்டும். இல்லையெனில், சட்டத்தால் எந்தவித பயனும் யாருக்கும் ஏற்படாது” என்றார்.

“இலஞ்சம் ஒழிக்கப்பட வேண்டும் என்று சட்டம் இயற்றுகின்றனர். ஆனால், குறைந்த வருமானம் உடையவர்கள் மட்டுமல்லாது அதிக வருமானம் பெறுபவர்களும் இலஞ்சம் வாங்குகின்றனர். போக்குவரத்துத்துறையில் இது அதிகமாகவே இருக்கிறது. இலஞ்சம் வாங்காமை என்கிற பண்பு மனித எண்ணத்தில் இருந்து வர வேண்டும். அறச்சிந்தனையும் இறையச்சமும் மனிதனுக்கு வேண்டும். அப்பொழுதுதான் இலஞ்சம் வாங்குவது குற்றம் என்பதனை உணர்வர். இலஞ்சத்தை ஒழிக்க வேண்டும் என்ற உணர்வு மன சிந்தனையிலிருந்து வர வேண்டும். ‘இலஞ்சம் கொடுப்பதும், வாங்குவது குற்றம்’ என எழுதி வைப்பதால் எந்த பலனும் ஏற்படப் போவதில்லை. இலஞ்சத்தை சட்டத்தால் மட்டும் ஒழித்துவிட முடியாது. சிலரைத் தண்டிக்க மட்டுமே சட்டம் பயன்படும். சட்டத்தால் அனைவரையும் திருத்த முடியாது. சில வேளைகளில் தனிப்பட்டவர்களின் விருப்பு வெறுப்பு காரணமாகத் தவறாகவும் சட்டம் பயன்படுத்தப்படுகிறது” என்றார். இன்றுவரை இலஞ்சம் ஒழிக்கப்படவில்லை. பயோனியர் முன்வைத்த கருத்து மனித மனங்களில் விதைக்கப்படவில்லை.

இந்நிலையில், ஐந்து ரூபாய் கட்டணத்தில் பதினைந்து நாட்கள் இரயிலில் இந்தியா முழுவதும் பிரயாணம் செய்யும் திட்டத்தை இரயில்வே நிர்வாகம் அறிவித்தது. அந்த உத்தரவின் காரணமாக வட இந்தியாவில் இருந்து கன்னியாகுமரி, நாங்குநேரி, திருக்குறுங்குடி, திருப்பதிசாரம், சுசிந்திரம், மண்டைக்காடு, திருவட்டாறு, திருவனந்தபுரம் முதலான புண்ணிய இடங்களை

தரிப்பதற்காக மக்கள் கூட்டம் கூட்டமாக திருநெல்வேலியில் வந்து இறங்கினர். கன்னியாகுமரி மாவட்டத்தில் அப்பொழுது ரெயில் வசதி கிடையாது. பயணிகள் மேற்கொண்டு யாத்திரையைத் தொடர பேருந்தைத் தவிர வேறு வசதி இல்லை.

பெரும்பாலான பேருந்துகள், தனி நபர்களுக்குச் சொந்தமான இடத்தில் நிறுத்தப்பட்டு இருந்தன. அப்பேருந்துகள் வந்து சேரும் நேரத்தையும், புறப்படும் நேரத்தையும் குறிப்பெடுக்க காவல் துறையினர் நியமிக்கப்பட்டிருந்தனர். மேலும், ஓட்டுநர், நடத்துநர் ஆகியோரின் கையொப்பம் பெறவும் காவலர்களை ஏற்படுத்தி இருந்தனர். பேருந்துகள் அங்கு வந்து செல்வதற்கும் திரும்பிச் செல்வதற்கும், அதற்குரிய ஏற்பாடுகளை செய்ய குத்தகைக்காரர் கள் அனுமதிக்கப்பட்டு இருந்தனர். அவர்கள், தங்கள் விருப்பம் போல் பேருந்து ஒன்றிற்கு தினமும் ஒரு தொகையை வரியாக வசூல் செய்து வந்தனர். மேலும், அப்பேருந்துகள் திருநெல்வேலி பேட்டை பகுதியில் சென்று திரும்பி வருமாறு கட்டாயப்படுத்தினர். இதனால் பேருந்து முதலாளிகள் மிகுந்த சிரமத்திற்கு உள்ளாயினர்.

அனைத்து பேருந்து உரிமையாளர்களும் பயோனியரை சந்தித்து இதற்கு ஒரு தீர்வு காண வேண்டும் என்றனர். இப்பிரச்சனையைத் தீர்க்க பயோனியர் சென்னை சென்றார். உயர்மட்ட அதிகாரிகளை நேரில் சந்தித்து நிலைமையை விளக்கிப் பேசினார். உண்மை நிலையை உணர்ந்த அரசு அதிகாரிகள் அங்கு நிலவிய விதிமுறை களை நீக்கி பயோனியர் கேட்டுக் கொண்டதன்படி உத்தரவுகளைப் பிறப்பித்தனர். பேருந்து உரிமையாளர்களும் ஓட்டுநர்களும் நடத்துநர்களும் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தனர். பயோனியரை நேரில் சந்தித்து நன்றிகளை தெரிவித்துக் கொண்டனர்.

பயோனியர், தன்னுடைய தேவைக்காக பச்சை நிறக் கார் ஒன்றினை பயன்படுத்தி வந்தார். அந்த வாகனம் படகுபோல் நீளமுடையதாக இருக்கும். அதற்கு ‘பிளேம் மவுத்’ என்று பெயர். அந்த காரைப் பார்ப்பதற்கு மக்கள் வருவர். அந்த கார் அவரிடம் மட்டும்தான் இருந்தது. கார் ஓட்டுநராக குற்றாலம் என்பவர் இருந்து வந்தார்.

ஒருதடவை ஓட்டுநர் குற்றாலம் காரை ஓட்டிவர அதில் பயோனியர் உட்கார்ந்திருந்தார். கார் மணிமேடை அருகே வந்தபோது ஒருவர் பயோனியரிடம் ஏதோ சொல்ல அவர் ஓட்டுநர் குற்றாலத்தை இறங்கச் சொல்லிவிட்டு ஓட்டுநர் இருக்கையில் தானே உட்கார்ந்து வாகனத்தை ஓட்டிச் சென்றார். சிறிது நேரத்தில் கிருசுணன் கோவில் அப்பன் செயல்சாமி குடும்பத்தை காரில் ஏற்றிவந்த பயோனியர் அவர்களை பேருந்தில் நெல்லைக்கு அனுப்பி வைத்தார். அனைவரும் அவரை ஆச்சரியமாகப் பார்த்தனர். அதற்குக் காரணம் என்னவென்றால், செயல்சாமியிடம் சில காலம் பயோனியர் ஓட்டுநராக வேலை பார்த்தார். அதற்குரிய நன்றியாகவே பயோனியர் அவ்வாறாக நடந்துகொண்டார். தனக்கு வேலை வாய்ப்பு கொடுத்தவர்களை, உதவி செய்தவர்களை நன்றியோடு அவர் நினைவில் கொண்டார்.

பாவனாசம் காரையார் அணைக்கு அம்பாசமுத்திரம் ரயில்வே நிலையத்தில் இருந்து மலைக்கு மேலுள்ள தனியார் அணைக்கு இரும்பு கம்பிகள், சிமெண்ட் முதலிய பொருள்களை லாரியில் ஏற்றிச் செல்ல வேண்டும் மற்றும் அதன் அருகிலுள்ள ஆலைக்கு பஞ்சு மூட்டைகள் மற்றும் சாமான்கள் எடுத்துச் செல்ல வேண்டும் என்பது தொடர்பான ஒப்பந்தம் ஒன்று நடைபெற்றது. ஒப்பந்தம் மிகவும் ஆபத்தானது என்பதால் ஒப்பந்தக்காரர்கள் பலர் அதனை எடுக்கத் தயக்கம் காட்டினர். பயோனியர் அந்த ஒப்பந்தத்தை ஒரு சவாலாக எடுத்துப் பணி செய்ய முன்வந்தார்.

ஒப்பந்தத்தின் அடிப்படையில் பணி செய்து கொண்டிருக்கும்போது, ஒருமுறை இரயிலில் வந்து இறங்கிய விலையுயர்ந்த மின்மாற்றி ஒன்றினை மலையின் அணைக்கட்டுப் பகுதிக்கு கொண்டு செல்ல வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. லாரியில் அதனை ஏற்றிக் கொண்டு செல்வது என்பது இயலாத காரியமாகும். பொறியியல் வல்லுநர்கள் அதனை எப்படி எடுத்துச் செல்வது என்பதற்கு பதில் கிடைக்காமல் திணறிக் கொண்டிருந்தனர். பயோனியர், அதைப் பார்வையிட்டு, “அதனை பத்திரமாக நானே கொண்டுவந்து இறக்கித் தருகிறேன்” எனக் கூறினார். அதற்கு அவர்கள், “இது விலையுயர்ந்த பொருள். இழப்பு ஏற்பட்டால் நீங்கள் பொறுப்பு ஏற்க முடியுமா?” என்று

கேட்டனர். அதற்கு பயோனியர், "அதற்கு நானே பொறுப்பு எடுத்துக் கொள்கிறேன்" என்றார்.

பயோனியர், உறுதிமிக்க இரும்புச் சக்கரங்கள் உடைய இரும்பு வண்டியில் மின்மாற்றியை ஏற்றிவிட்டு, ஒன்றுமில்லாத இன்னொரு லாரி ஒன்றில் இரும்பு வண்டியைப் பிணைத்து மெதுவாக இழுத்துச் சென்று மலையிலுள்ள அணைக்கட்டுப் பகுதியில் கொண்டு சேர்த்தார். அதனைக் கண்டு வியந்த பொறியியல் வல்லுநர்கள் அவரை புகழ்ந்து பாராட்டி தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர். பயோனியரின் திறனைப் பாராட்டிய காரையார், அணையின் அலுவலகத்தில் பயோனியர் புகைப்படத்தையும் பெயரையும் பொறித்து வைத்தார்.

திருவிதாங்கூர் நாட்டைப் போன்று கன்னியாகுமரி மாவட்டம் தமிழகத்தோடு சேர்க்கப்பட்ட பிறகு தமிழக அரசும் பேருந்து போக்கு வரத்தினை தேசிய மயமாக்கியது. இதனால் எஞ்சியிருந்த அனைத்துப் பேருந்துகளையும் பயோனியர் லாரிகளாக மாற்றி விட்டார். தமிழக அரசும் அதற்குரிய இழப்பீடு வழங்கவில்லை. அன்றைய காலகட்டத்தில், இராமகிருசுணா என்கிற அவருடைய செல்லக் குழந்தையும் மரித்துப்போனது.

தொழில் மற்றும் உயிரிழப்பு அவரை சோகத்தில் ஆழ்த்தினாலும் அதற்காக அவர் மனம் தளர்ந்து விடவில்லை. அவருடைய வீட்டின் பெயர் அக்குழந்தையின் நினைவாகவே பேபி இராமகிருசுணா என அழைக்கப்படுகிறது. தனது பேருந்துகளை லாரிகளாக மாற்றிய அவர் நாகர்கோவில், தக்கலை, மார்த்தாண்டம், நெய்யாற்றங்கரை, திருவனந்தபுரம், ஆற்றிங்கல், நாங்குநேரி, திருநெல்வேலி, தூத்துக் குடி ஆகிய இடங்களில் வாடகைக்கு விட்டு வந்தார். மேலும், அந்தந்த பகுதிகளில் லாரி முன்பதிவு செய்யும் அலுவலகங்களையும் நிறுவினார்.

திவான் சி.பி. இராமசாமி அய்யரிடம் போக்குவரத்தை ஏன் தேசிய மயமாக்கினீர் எனக் கேட்டபோது, "**1935**–இல் தமிழ் மக்களின் நலனைக் கருத்தில் கொண்டு கன்னியாகுமரி முதல் திருவனந்த புரம் வரை சாலை அமைத்தேன். அதற்கு தமிழ் மக்கள், நான்

ஒருதலைப்பட்சமாக நடந்து கொண்டதாக என்மீது விமர்சனம் செய்தனர். மலையாள மக்கள் வாழும் பகுதியில் சாலையை நல்ல முறையில் செப்பனிட்டதாக குற்றம் சாட்டினர். அதனால்தான் கன்னியாகுமரி முதல் திருவனந்தபுரம் வரையுள்ள சாலையை தேசிய சாலையாக மாற்ற வேண்டுமெனத் தீர்மானித்தேன். இதற்காக போக்குவரத்துத் துறையில் மிகுந்த அனுபவமுள்ள சால்ட்டர் என்ற பொறியாளரை லண்டனிலிருந்து வரவழைத்து சாலையை வெற்றிகரமாக சீரமைத்தேன். பயோனியர் குமாரசாமியை எனக்கு நன்றாகத் தெரியும். போக்குவரத்து சேவை அவரால் நல்ல முறையில் செயல்பட்டு வந்தது. அவரால் திருவிதாங்கூர் அரசு பெருமை பெற்றது'' என்றார்.

இதன் உள்கிடப்பு அவ்வாறாக இல்லை. தமிழர்கள் வாழும் பகுதி களில் பேருந்து செல்லும் தடங்களை திருவிதாங்கூர் அரசு சரியான முறையில் பராமரிக்கவில்லை. இதனால் பேருந்துகள் அடிக்கடி பழுதாகி வழியில் நின்று விடுவதுண்டு. பயணிகள் அதிக சிரமத்திற்கு உள்ளானார்கள். அதற்கு மேலும், பேருந்துகளை பழுது பார்க்கும் வேலை அதிகரித்தது. இதனால் பேருந்து உரிமையாளர் களுக்கு இலாபம் கிடைக்கவில்லை.

திவானிடம் பயோனியர், ''இந்த சாலைகளை தனியார்வசம் ஒப்படைத்து அதற்குரிய சாலை வரியை வசூலிக்கலாம். சாலையும் நல்ல முறையில் சீர்படுத்தப்படும்'' என்கிற கோரிக்கையை முன்வைத்தார். இது திவானுக்கு கோபத்தை ஏற்படுத்தியது. பயோனியர், தன்னை குறை சொல்வதாகவே கருதினார். பயோனி யரை பழிவாங்க நினைத்தார். கன்னியாகுமரி முதல் திருவனந்தபுரம் வரையுள்ள சாலையை தேசியமயமாக்கினார். அவர், பயோனி யருக்கு ஏற்பட்ட இழப்பீட்டை வழங்கவோ அல்லது ஈடுசெய்யவோ முன்வரவில்லை. பயோனியர் முன்வைத்த தொலைநோக்குப் பார்வைதான் பாரதப் பிரதமர் வாசுபாய் காலத்தில் தங்க நாற்கரச் சாலைத்திட்டமாக உதயமானது.

# 3

# பயோனியர் திரையரங்கங்கள்

திரைப்படம் தமிழகம் மட்டுமின்றி உலகம் முழுவதும் பெரும் தாக்கத்தை உருவாக்கியது. திரைப்படம் பார்க்கும்போதே தங்களை கதாநாயகர்களாக கதாநாயகிகளாக நினைத்துப் பார்க்கிறார்கள். அந்த அளவிற்கு திரைப்படத்தின் ஈர்ப்பு இன்னும் இருந்து வருகிறது.

இந்தியாவில் வெளியிடப்பட்ட முதல் திரைப்படம் ‘இயேசுவின் வாழ்க்கை’. இதனை டுபண்ட் என்ற பிரெஞ்சுக்காரர் மும்பையில் வெளியிட்டார். அதுவொரு ஊமைப்படம். அப்படத்தை அவர் திருச்சியில் வெளியிட்டுக் கொண்டிருந்தபோது உடல்நலக் குறைவால் ஊருக்குச் செல்லவிருந்தார். அப்பொழுது, திருச்சியை சார்ந்த சாமிக்கண்ணு என்பவர் இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து திரைப்படப் பிரதியையும், படம் காட்டும்  கருவியையும் வங்கிக் கொண்டார்.

அவர், இரெயில்வே பணியைத் துறந்துவிட்டு ஊர் ஊராகச் சென்று படம் காட்டி வந்தார். அப்போது, சார்லி சாப்ளின் படங்கள் வெளிவரத் துவங்கின. இதனால் இவர், 1914இல் கோவையில் ‘Variety Hall’ என்கிற பெயரில் திரையரங்கம் ஒன்றினை அமைத்தார். தொடர்ந்து ஊமைப்படங்கள் பல வரத் துவங்கியதால் ஆங்காங்கே திரை யரங்குகள் அமைக்கப்பட்டன. சென்னையில் கட்டப்பட்ட முதல் திரையரங்கம் ‘கெயிட்டி’. இதனைக் கட்டியவர் வெங்கையா. திரையரங்குகள் வாயிலாக நல்ல வருமானம் கிடைத்தது.

பயோனியர், 1929இல் திருநெல்வேலி மற்றும் திருவனந்தபுரம் ஆகிய பகுதிகளிலுள்ள திரையரங்குகளை வாடகைக்கு எடுத்தார். திருவனந்தபுரத்தில் துவக்கிவைத்த முதல் திரைக்காட்சிக்கு திருவிதாங்கூர் மன்னர் சித்திரைத் திருநாள் வருகை தந்து

சிறப்பித்தது மட்டுமின்றி திரைப்படத்தைக் கண்டு களித்தார். நல்ல முறையில் ஓடிக் கொண்டிருந்த திருவனந்தபுரம் திரையரங்கம் ஒருநாள் தீக்கு இரையானது. அதனால் திருவனந்தபுரம் மற்றும் திருநெல்வேலி திரையரங்குகளை பயோனியர் மூடிவிட்டார்.

அதேவேளையில், குமரி மாவட்ட மக்கள் கண்டு களிப்பதற்கு ஒரு திரையரங்கம் தேவை என்பதனை பயோனியர் உணர்ந்தார். அதற்கு முன்பாக பேசாத திரைப்படக் கொட்டகை ஒன்று நாகர்கோவிலில் இருந்தது. படம் ஓடிக் கொண்டிருக்கும்போது ஒருவர் திரையின் முன்பாக நின்றுகொண்டு கதையைச் சொல்லிக் கொண்டு இருப்பார். மக்கள் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருப்பர்.

1930இல் நாகர்கோவிலில் ‘பயோனியர் பிக்சர் பேலசு’ என்கிற திரை கொட்டகையை மணிமேடை சமீபம் பயோனியர் கட்டி முடித்தார். அதனைத் திருவிதாங்கூர் திவான் சி.பி. இராமசாமி அய்யர் துவக்கி வைத்தார். இத்திரையரங்கில் ஆங்கில நடிகர்கள் நடித்த பேசாத திரைப்படங்களும், லிட்டில், நவின் சந்திரன், பில்லிமோரியா, கோகர், நூர்சகான், அண்டர் வாலி போன்றவர்கள் நடித்த இந்திப் படங்களும் திரையிடப்பட்டன. மக்கள் எளிதில் புரிந்து கொள்வ தற்கு வசதியாக மொழி பெயர்ப்பாளர்கள் நியமிக்கப்பட்டனர். இந்திப் படங்களை மொழிபெயர்க்கும் பணியினை சாமுவேல் செய்துவந்தார். மலையாளப் படங்கள் மொழிபெயர்க்க வேண்டிய தேவை ஏற்படவில்லை. ஏனெனில் குமரி மாவட்டத்திலுள்ள பெரும்பாலானோர் மலையாளம் அறிந்திருந்தனர்.

இடலாக்குடி கவிஞர் மி. பாலசுப்ரமணியம் என்பவர் பயோனியர் திரையரங்கில் பொதுமேலாளராக நியமிக்கப்பட்டார். திரைப்படத்தை விளம்பரப்படுத்துவதற்கு நான்கு சக்கரம் பொருத்தப்பட்ட முக்கோணம் வடிவிலான மரப்பலகையின் இருபுறமும் திரைப்பட விளம்பரத்தை ஒட்டுவர். அதனை ஒருவர் தள்ளிக்கொண்டு வருவார். இன்னொருவர் கொட்டு அடித்துக் கொண்டு வருவார். மக்கள் கூட்டமுள்ள ஒரு குறிப்பிட்ட இடத்தில் விளம்பர வண்டியை நிறுத்திவிட்டு அவர்கள் இருவரும் சத்தமாக உரையாடுவார். “யே ராமா, எங்கப்போற ?”. “சினிமா பார்க்க”, “என்ன சினிமா ?”,

“பவளக்கொடி”, “எந்த பேலசு ?”, “பயோனியர் பிக்சர் பேலசு” என திரைப்படத்தை விளம்பரப்படுத்துவர். மேலும், கதைச் சுருக்கம் எழுதப்பட்ட காகிதத்தை இலவசமாக விநியோகம் செய்வர். கதை முழுமை பெறாமலே, “மீதியை வெள்ளித் திரையில் காண்க” எனக் குறிப்பிட்டிருப்பர். இவ்வாறாக, மக்களை கவருவதற்காக விளம்பர யுக்திகளைக் கையாண்டனர்.

பயோனியர் பிக்சர் பேலசு அருகிலுள்ள குளத்தின் கரையில் கோல்டன் டூரிங் டாக்கீசு ஒன்று புதிதாகத் துவங்கப்பட்டது. திரைப் படங்களை வெளியிடுவதில் இவ்விரு திரையரங்கு உரிமை யாளர்கள் மத்தியில் போட்டி நிலவியது. அதனைத் தவிர்ப்பதற்காக கோல்டன் திரையரங்கினை நல்ல விலை கொடுத்து வாங்கி போட்டியினைத் தவிர்த்துக் கொண்டார் பயோனியர். அதன்பின்பு தொடங்கப்பட்ட மதுரா பவன் மற்றும் கிருசுணா டாக்கீசு திரை யரங்குகளையும் விலைக்கு வாங்கினார்.

பெரும்புகழ் பெற்ற நாடக நடிகை கே.பி. சுந்தரம்பாளைக் கொண்டு நாகர்கோவிலில் மூன்று நாடகங்கள் நடத்த ஒப்பந்தம் செய்தார் மதுரையைச் சார்ந்த சந்தான கிருசுணக்கோன் என்ற கருப்பையாக் கோனார். நாடகம் நடைபெறுவதற்கு அவர் மீனாட்சிபுரம் மீனாம்பிகா திரையரங்கை ஏற்பாடு செய்தார். உரிமம் பெற்று முதல் நாடகத்தை நடத்தி முடித்தார். திரையரங்கின் வசதியின்மை குறித்தும், ஒழுங்கீனம் குறித்தும், பண இழப்பு ஏற்பட்டதைத் தொடர்ந்தும் இனியுள்ள இரண்டு நாடகங்களையும் அங்குவைத்து அரங்கேற்ற முடியாது என நடிகை சுந்தரம்பாள் தெரிவித்தார்.

கருப்பையா கோனார், பயோனியரை அணுகி ஏனைய இரண்டு நாடகங்களையும் தங்கள் பயோனியர் திரையரங்கில் வைத்து நடத்துவதற்கு அனுமதி தர வேண்டுமென வேண்டி நின்றார். பயோனியரும் அவரின் பரிதாப நிலையைக் கண்டு ஆதரவு நல்கினார். நாடகத்திற்கான முன்பதிவு சீட்டுகள் அனைத்தும் விற்றுத் தீர்ந்துவிட்டன. உரிமத் தொகையை நகரசபைக்குச் செலுத்தி உரிமம் பெற அணுகியபோது அதிகாரிகள் அதனை வாங்க மறுத்துவிட்டனர்.

நாடகத்தைக் குறிப்பிட்ட தேதியில் நடத்த வேண்டும் என்பதால் முறைப்படி மனுவை தபாலிலும், உரிமத் தொகையை பண ஒலை மூலமும் செலுத்தினார். இருப்பினும், அனுமதி வழங்கப்படவில்லை. நாடகத்தைக் காண கூட்டம் அலைமோதியது. திட்டமிட்டபடி நாடகத்தை அரங்கேற்ற பயோனியர் விரும்பினார். அவர் விருப்பப்படி நாடகம் அரங்கேற்றம் செய்யப்பட்டது. நகரசபையின் முறையான அனுமதியின்றி நாடகம் அரங்கேற்றப்பட்டதாக குற்றம் சுமத்திய நகரசபை நிர்வாகம் பயோனியர்மீது வழக்கு தொடர்ந்தது.

மூன்றாவது நாடகம் புகழ்பெற்ற நந்தனார் சரித்திரம். அந்நாடகத் தையும் நடத்துவதில் பிரச்சனை தொடர்ந்தது. இந்நாடகத்தை நடத்தக் கூடாதென நகரசபை அதிகாரிகள் திருவனந்தபுரம் மாவட்ட நீதிபதி இராமன் பிள்ளையைச் சந்தித்து உத்தரவு பெற்றனர். இதனைக் கேள்விப்பட்ட பயோனியர் இரவு வேளையில் மாவட்ட நீதிபதியை சந்தித்து உண்மையை விளக்கி நாடகம் நடத்த உதவ வேண்டும் எனக் கேட்டுக்கொண்டார். தான் இட்ட உத்தரவை தானே மீறுவது சரியில்லை என்கிற சிந்தனையில் ஆழ்ந்தார். தா. பத்மநாபப்பிள்ளை என்பவரிடம் நந்தனார் சரித்திரத்தின் பெருமையை சுருக்கமாக எடுத்துக் கூறும்படி பயோனியர் கேட்டுக் கொண்டார். அவர், நந்தனார் சரித்திரத்தை எடுத்துக் கூறியது மட்டுமின்றி சுந்தரம்பாள் நடிப்புத் திறமையையும் எடுத்துக் கூறினார். நீதிபதியின் மனைவி, நாடகத்தை காண விரும்பினார். தனது விருப்பத்தை கணவரிடம் தெரியப்படுத்தினாள். அதனைக் காண நீதிபதிக்கும் ஆர்வம் ஏற்பட்டது.

நாடகத்திற்கான அனைத்துச் சீட்டுகளும் ஏற்கனவே முன்பதிவு செய்யப்பட்டுவிட்டது. நாடகத்தை உடனடியாக நிறுத்துவதால் பிரச்சனை ஏற்படுவதற்கும், பெரிய அளவில் இழப்பு ஏற்படுவதற்கும் வாய்ப்பிருக்கிறது. அதனால் நாடகத்தை நடத்துவதற்கு அனுமதி தர வேண்டும் என்றார் பயோனியர். நீதிபதியோ, “நாடகத்தைக் காண நானே நேரில் குடும்பத்துடன் வருகிறேன்” என்றார். மறுநாள் காலை பயோனியர் திரையரங்கம் முன் நாடகத்தைக் காண்பதற்கு கூட்டம் அலைமோதியது.

திரையரங்கம் முன்பாக காவல்துறை துணைக்கண்காணிப்பாளர் தலைமையில் காவல்துறையினர் நிறுத்தப்பட்டனர். நாடகம் நடக்குமா என நாடகத்தைக் காண வந்தவர்கள் ஒருவருக்குள் ஒருவர் பேசிக்கொண்டனர். காவல்துறையினர், நாடகம் காண வந்தவர்களை வீட்டிற்கு செல்லுமாறு அறிவுரை கூறிக் கொண்டிருந்தனர். இருப்பினும், கூட்டம் அசைவதாக இல்லை. அப்பொழுது நாடகத்தைக் காண தனது குடும்பத்துடன் காரில் வந்து இறங்கினார் மாவட்ட நீதிபதி இராமன்பிள்ளை. முன்பதிவு செய்தவர்கள் திரையரங்கிற்குள் அமைதியாகச் செல்ல அனுமதிக்கப் பட்டனர். பயோனியரின் செல்வாக்கைக் கண்டு நகரசபை அதிகாரிகள் அதிர்ந்து போயினர்.

1936இல் சமசுத்தான காங்கிரசு கட்சிக் கூட்டம் நடத்துவதற்காக அவருடைய நண்பர் வழக்கறிஞர் சங்கரப்பிள்ளை திரையரங்கை வாடகைக்குக் கேட்டார். அந்த காலத்தில் கட்சிக் கூட்டம் நடத்துவதற்கு திரையரங்கினை வாடகைக்கு எடுப்பார்கள். கூட்டத்தில் சமசுத்தான காங்கிரசார் திருவிதங்கூர் திவானை கண்டித்துப் பேசினார்கள். அவ்வரங்கில் வைத்து, திருவிதாங்கூர் திவான் சி.பி. இராமசாமியை மாற்றுவதற்கு தீர்மானம் நிறைவேற்றினர். இதனைக் கேள்விப்பட்ட திவான், பயோனியர் பேருந்தில் ஆட்களை கூட்டி வந்ததாகவும், அரசுக்கு எதிராகப் பேசியதாகவும் கூறி வழக்கு போட்டார். மேலும், பயோனியரை கைது செய்து தக்கலை சிறையில் அடைத்தார். இச்சம்பவத்திற்கும் பயோனியருக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை என்பதனை வேம்பு அய்யர் மூலம் அறிந்த திவான், அவரை ஒரு சில வாரத்திற்குப் பின்பாக விடுதலை செய்தார். நடந்த செயலுக்காக திவான் வருத்தம் தெரிவித்தார்.

பயோனியர் திரையரங்குகளில் அரசியல்வாதிகளின் கூட்டத்திற்கு மட்டுமின்றி நாடகக் கலைஞர்களை ஊக்குவிக்கும் வகையில் நாடகங்களை அரங்கேற்றவும் பயோனியர் அனுமதி அளித்தார். பழம் பெரும் நடிகர்களான நவாப் இராசமாணிக்கம், டி.கே.எச். சகோதரர்கள், அகத்தின் யோசப், கே.பி. கேசவன், பி.யு. சின்னப்பா, டி.ஆர். மகாலிங்கம், எம்.சி.ஆர். ஆகியோர் நாடகங்களில் நடிக்க வந்துள்ளனர்.

திவான் சர். சி.பி. இராமசாமி அய்யரின் செயலாளர் சிதம்பரம் கேட்டுக் கொண்டதற்கு இணங்க நவாப் இராசமாணிக்கம் பிள்ளையின் நாடகக் கூட்டத்தினரைத் திருவனந்தபுரத்தில் இருந்து தனது வாகனங்களில் அழைத்து வந்து ஒழுகினசேரி சரசுவதி அரங்கில் பல நாட்களாக தினமும் நாடகம் நடக்க உதவி செய்தார். பயோனியர் அவருடைய திரையரங்கில் இறுதியாக நடைபெற்ற இராமாயண பட்டாபிசேக நாடகத்தை தனது குடும்பத்துடன் உட்கார்ந்து கண்டு களித்தார். நாடகக் குழுவினரை குமாரகோவில் முருகன் சன்னதிக்கு அழைத்துச்சென்று விருந்து வழங்கினார். அவர்களுக்கு தங்க மாலையில் செந்தில் வேலன் உருவம் பொறித்த டாலரை இணைத்து பரிசளித்து மகிழ்ந்தார்.

பயோனியரின் திரையரங்கில் அரிதாசு, சுந்தரம்பாள், நந்தனார், பாகப் பிரிவினை, பாசமலர், படிக்காத மேதை, பார் மகளே பார், தெய்வப்பிறவி, வேலைக்காரி, பணமா பாசமா, கைராசி, கை கொடுத்த தெய்வம், மலைக்கள்ளன், மன்னாதிமன்னன், வீரப் பாண்டிய கட்டப்பொம்மன் போன்ற புகழ்பெற்ற திரைப்படங்கள் வெள்ளிவிழாவும் பொன்விழாவும் கண்டன. சிறந்த திரையரங்கு உரிமையாளர் என்ற நன்மதிப்பை பயோனியர் பெற்றார்.

வீரப்பாண்டிய கட்டப்பொம்மன் 118வது நாள் ஓடிக் கொண்டிருக்கும் அன்று பயோனியரின் அழைப்பின்பேரில் நடிகர் திலகம் சிவாசி கணேசன் மற்றும் இயக்குநர் பந்துலு ஆகியோர் திரையரங்கிற்கு வருகை புரிந்தனர். திரைப்படம் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது அவர்கள் திரை முன்பாகத் தோன்றி திரைப்படம் காணவந்த ரசிகர்கள் முன்பாகப் பேசினர். ரசிகர்கள் விசில் அடித்து தங்கள் உற்சாகத்தை வெளிப்படுத்தினர். பயோனியர், யானைத் தந்தத் திலான கோவில் ஒன்றை சிவாசி கணேசனுக்கும் கேடயம் ஒன்றினை இயக்குநருக்கும் பரிசாகக் கொடுத்து அவர்களுக்கு பெருமை சேர்த்தார். அதைப்போன்று, மலைக்கள்ளன் திரைப் படத்தில் நடித்த புரட்சித் தலைவர் எம்.சி. இராமச்சந்திரனை அழைத்து அவரை கௌரவித்து பரிசு வழங்கி பாராட்டினார்.

திரையரங்குகளுக்கு மாதாமாதம் ரூ.50/– வரி செலுத்த வேண்டும் என்கிற முறை இருந்தது. அத்துடன் உரிமம் புதுப்பிக்க வருடம் தோறும் தனியாக வரி செலுத்த வேண்டும் என்ற விதிமுறையும் இருந்தது. இதனால் இருக்கிற சிரமத்தை எழுத்துப் பூர்வமாக எழுதிய பயோனியர், அதனை அரசுக்கு மனுவாகவும் அனுப்பினார். இதனால் மாதம்தோறும் செலுத்தும் ரூ.50/– வரி வேண்டாம் என்றும், வருடம்தோறும் ரூ.27.50/– செலுத்தினால் போதும் என்றும் அரசு உத்தரவு பிறப்பித்தது.

1946இல் எர்ணாகுளத்தைச் சார்ந்த மாளவியார் என்பவர் பயோனியருக்கு அறிமுகம் ஆனார். இவர்கள் இருவரும் இணைந்து பயோனியர் – பிரகதி என்கிற பெயரில் பங்குதாரராக இருந்து திரைப் பட விநியோகத்தைத் துவங்கினர். அதில் கிடைக்கும் இலாபம் மற்றும் இழப்பை சம அளவில் பகிர்ந்துகொள்வது எனவும் முடிவு செய்தனர். முக்கியமாக மலையாளத் திரைப்படங்களை திரு வாங்கூர், கொச்சி மற்றும் மலபார் பகுதிகளில் உள்ள கொட்டகை களில் விநியோகம் செய்து வந்தனர். மூன்று வருடங்கள் நல்ல முறையில் இயங்கிக் கொண்டிருந்தது.

முதலில் நாணயமாக இருந்தார் மாளவியார். அதன்பிறகு தனது சுயருபத்தைக் காண்பிக்கத் துவங்கினார். மோசமான திரைப் படங்களை குறைந்த விலைக்கு வாங்கி அதனை அதிக விலைக்கு வாங்கியதாகவும், அதில் இழப்பீடு ஏற்பட்டதாகவும் காண்பிக்கத் துவங்கினார். உண்மை நிலவரத்தை அறிந்த மாளவியார்மீது பயோனியர் நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தார். மாளவியரோ தன் பெயரில் எந்தவித சொத்தோ பணமோ இல்லை என்றும், திரைப் படங்கள் வழியாக பெரிதாக ஒன்றும் சம்பாதிக்கவில்லை என்றும் பதிலுரையில் குறிப்பிட்டிருந்தார். அப்பொழுது அவருடைய அனைத்து சொத்துகளும் அவரது மனைவி பெயரில் இருந்தது. இதனால் நேரத்தை விரயம் செய்ய வேண்டாமென கருதிய பயோனியர் வழக்கை திரும்பப் பெற்றுக்கொண்டார். இதில் பயோனியருக்கு ஐந்து இலட்ச ரூபாய் இழப்பு ஏற்பட்டது. அதற்கும் அவர் மனம் கலங்கிவிடவில்லை. வழக்கம்போல் தன்னுடைய மனதை வேறுபக்கமாக திருப்பிக்கொண்டார்.

4

# பயோனியரின் சேவைகள்

பெருநகரங்களில் இருப்பதுபோன்று குமரி மக்கள் பயன்பாட்டிற்கு ஒரு வங்கி தேவை என்பதனை உணர்ந்தார் பயோனியர். அதன் அடிப்படையில் நாகர்கோவிலில் திருவனந்தபுரம் நிரந்தர நிதி என்கிற பெயரில் ஒரு வங்கியை 1930இல் துவங்கினார். அதன் இயக்குநராக தானே இருந்து செயல்பட்டார். அதன்பிறகு இந்த வங்கியானது பல கிளைகளைக் கொண்ட ஒரு நிறுவனமாக மாறியது. மக்கள் அதிகளவில் பயன் அடைந்தனர். பிற்காலத்தில் இந்த வங்கி அரசுடைமை ஆக்கப்பட்டது. மத்திய அரசால் தேசிய மயமாக்கப்பட்ட கனரா வங்கி இந்த வங்கியை ஏற்றெடுத்தது.

தபால் சேவையை பயோனியர் நடத்தி வந்தார். கடிதங்கள், பயோனியர் பேருந்து மூலம் ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டது. அதிலும் குறிப்பாக நாகர் கோவிலில் இருந்து திருவனந்தபுரத்திற்கு துரிதமாக எடுத்து செல்லப்பட்டன. அவ்வாறு எடுத்துச் செல்லப்பட்ட பயோனியர் பேருந்திற்கு ‘அஞ்சல் வண்டி’ என்று பெயர். கடிதங்கள் குறிப்பிட்ட நேரத்தில் கொண்டு சேர்க்கப்பட்டதால் தபால்களை அனுப்புவதற்கு நம்பத்தகுந்த நிறுவனமாக பயோனியர் அஞ்சல் சேவை சிறந்து விளங்கியது. திருவிதாங்கூர் மன்னர் பயோனியரின் சேவையைப் பாராட்டி விருது வழங்கி சிறப்பித்தார்.

பயோனியர் பனிக்கட்டி நிறுவனம், பயோனியர் மாவு ஆலை, பயோனியர் எரிபொருள் கூடம், பயோனியர் ரப்பர், பயோனியர் இயந்திரங்கள், பயோனியர் இயந்திரப் பணிமனை, பயோனியர் பொட்டல நிறுவனம், பயோனியர் வெளி நிறுவனம், பயோனியர் பேருந்து சேவை என அனைத்து அலுவலகமும் மணிமேடை சந்திப்பிலே அமைந்திருந்தது. அவருடைய உப்புத் தொழிற்சாலை இராசாக்கமங்கலத்தில் அமைந்திருந்தது.

1941இல் திருவிதாங்கூர் மன்னர் சித்திரைத் திருநாள், பள்ளிக் கூடத்தில் படிக்கும் மாணவர்களுக்கு வாஞ்சி ஏழைநிதி என்கிற பெயரில் ஒரு திட்டத்தைத் துவக்கினார். குமரியில் 34 பள்ளிக் கூடங்கள் தேர்வு செய்யப்பட்டிருந்தன. அத்திட்டத்தின்படி பள்ளியில் பயிலும் குழந்தைகளுக்கு இலவச உணவு வழங்கப் பட்டது. இன்றைக்கு இத்திட்டம் சத்துணவுத் திட்டம் என்று தமிழகத்தில் அழைக்கப்படுகிறது. தமிழகத்தில் சத்துணவுத் திட்டம் அறிமுகம் ஆவதற்கு முன்பாகவே கன்னியாகுமரி மாவட்டத்திற்கு உட்பட்ட திருவிதாங்கூர் நாட்டில் இலவச உணவு அறிமுகப்படுத்தப் பட்டது என்பது வரலாற்றுச் செய்தி.

1944ஆம் ஆண்டு "வஞ்சி ஏழை நிதி" என்னும் நிறுவனம் திருவனந்தபுரத்தில் மன்னராலும் திவான் சர்.சி.பி. இராமசாமி அய்யராலும் ஏழைக் குழந்தைகளுக்கு பள்ளிக்கூடத்தில் மதிய உணவு கொடுப்பதற்காக அமைக்கப்பட்டது. அவர்கள் இதனைக் குறித்து ஆலோசனை செய்து கொண்டிருக்கும்போது, பயோனியர் தாமாகவே முன்வந்து அவருடைய புதிய லாரிகளை அவ்வரசுக்கு நன்கொடையாக கொடுக்க முன்வந்தார். அதனைக் கொடுத்தது மட்டுமின்றி ஒவ்வொரு பள்ளிக் கூடத்திற்கும் இலவசமாக உணவுப் பொருள்களைக் கொண்டு சேர்க்கவும் ஏற்பாடு செய்தார்.

இத்திட்டம் குழந்தைகளுக்கு ஏற்ற நல்ல திட்டம் என்பதற்காகவும், குமரி மக்கள் அனைவரும் கல்வியில் சிறந்து விளங்க வேண்டும் என்பதற்காகவும், தன்னைப் போன்று குழந்தைகள் கல்வியை பாதியில் நிறுத்திவிடக்கூடாது என்பதற்காகவும் இந்த நற்காரி யத்தை செய்ய பயோனியர் முன்வந்தார். பயோனியர் செய்த இவ்வுதவியை திருவிதாங்கூர் மன்னர் புகழ்ந்து பாராட்டினார்.

பயோனியர், தான் சம்பாதித்த பணத்தில் 285 ஏக்கர் நிலத்தை தடிக்காரன் கோணத்தில் ஞானாபரணம் என்பவரிடமிருந்து வாங்கினார். அங்கு, மிருகங்களின் அச்சுறுத்தல்கள் அதிகமாக இருந்தது. அதனை சமாளிக்க வேண்டி வேலி அமைத்து காடுகளை பண்படுத்தி தென்னை, வாழை, பலா, கமுகு, நல்லமிளகு, கிழங்கு போன்றவைகளைப் பயிர் செய்தார். 1942இல் 700 ஏக்கர் பரப்பளவு

கொண்ட இரு மலைகளை வாங்கி அதில் விவசாயம் செய்தார். 1948இல் ரப்பர் பண்ணை ஒன்றினை உருவாக்கினார்.

1952இல் 648 ஏக்கர் பரப்பளவு கொண்ட ரப்பர் பயிரிட்ட பண்ணையை கிரௌத்தர் என்பவரிடமிருந்து விலைக்கு வாங்கினார். அதற்குரிய பணத்தை பத்து தவணைகளில் கொடுப்ப தாக பயோனியர் வாக்குறுதியளித்தார். அதற்கு அவரும் ஒப்புக் கொண்டார். தான் வாங்கிய ரப்பர் பண்ணைக்கு "பால்குளம் பண்ணை" என்று பெயர் வைத்தார். ஒப்பந்தம் முடிந்த சில மாதங் களிலே கிரௌத்தர் மரித்து விட்டார். அவருடைய உறவினர்கள் யாரும் இந்தியாவில் இல்லை. பணத்தை கேட்பதற்கும் யாரும் இல்லை. இருப்பினும் அப்பணத்தை உரிய வாரிசுதாரர்களிடம் கொடுக்க வேண்டும் என்பதில் நேர்மையாக இருந்தார். கிரௌத்தரின் உடன்பிறந்த சகோதரர் ஈசலே இங்கிலாந்து நாட்டில் வசித்து வந்தார். பயோனியர், அவரைத் தொடர்புகொண்டு செலுத்த வேண்டிய பாக்கி தொகையை அவருக்கு அனுப்பி வைத்தார். சென்னை, பாளையங்கோட்டை, வடசேரி, நாகர்கோவில், கன்னியா குமரி, தெரிசனங்கோப்பு, அருமநல்லூர், குளச்சல், இரணியல், தக்கலை, நல்லூர் ஆகிய பகுதிகளிலும் பயோனியருக்கு சொத்துகள் உண்டு.

ஒருதடவை அவரது பால்குளம் பண்ணையை ஆய்வு செய்வதற்காக அதிகாரிகள் வந்தனர். அங்கே தோட்ட முதலாளியாக மேற்பார்வை செய்ய வேண்டிய பயோனியர் ஒரு சாதாரணத் தொழிலாளியாக வேட்டியும் பருத்தியிலான உள்சட்டை ஒன்றையும் அணிந்து வேலை செய்து கொண்டிருந்தார். தோட்ட அலுவலகத்தில் இரு பெஞ்சுகளும் சில நாற்காலிகளும் இருந்தன. ஆய்வுக்கு வந்த அதிகாரி பயோனியரிடம், "ஏன் சார், ஓய்வெடுக்க ஒரு சாய்வு நாற்காலி வைத்திருக்கக்கூடாதா ?" என்று கேட்டார். அதற்கு அவர், "சாய்வு நாற்காலி இருந்திருந்தால் மதிய உணவு அருந்தியபின் சற்று சாய்ந்து ஓய்வெடுக்கத் தோன்றும். அதில் சாய்ந்தால் தூக்கம் வரும். அதனைத் தவிர்க்கவே சாய்வு நாற்காலியை தவிர்த்துவிட்டேன்" என்றார்.

அன்று மதியம் ஆய்வுசெய்ய வந்த அதிகாரிகளுக்கு சாதாரணமான உணவினை ஏற்பாடு செய்து கொடுத்தார். அவர்களும் தயங்காமல் உணவினை உண்டனர். உணவருந்திய பின்பு கைகழுவுவதற்கு அவரே முன்வந்து தண்ணீரை ஊற்றிக் கொடுத்தார். தொழில் அதிபதியாக இருந்தாலும் ஒரு தொழிலாளியாகவே நடந்து கொண்டார்.

அவருடைய பண்ணைகளில் விளைந்த பொருள்களை எச்.எம். ஆர்.வி. மேல்நிலைப் பள்ளியின் தெற்கு பகுதியில் விற்பனை செய்வார். நாளடைவில் அது பயோனியர் சந்தையாக மாறியது. மட்டிப்பழம் கன்னியாகுமரி மாவட்டத்தில் பிரபலமானது. இப்பழத்தை அதிகளவில் விளைச்சல் செய்து விற்பனை செய்தார். இதனால் இப்பழம், “பயோனியர் மட்டிப்பழம்” என பெயர் பெற்றது. பயோனியர் யாரை சந்திக்க சென்றாலும் அவருக்கு கொடுப்பதற்கு மட்டிப் பழக்கொலை ஒன்றினைக் கையுடன் எடுத்துச் செல்வார்.

இரண்டாவது உலகப் போரின்போது உணவிற்கு பஞ்சம் ஏற்பட்டது. அரிசி விலை பன்மடங்கு உயர்ந்தது. அதனை வாங்கி சமைக்க ஏழைகளுக்கு எட்டாக் கனியாக இருந்தது. குமரி மண்ணில் வறுமை தாண்டவம் ஆடியது. பயோனியர், தனது பண்ணையில் விளைந்த கிழங்குகளை நாகர்கோவிலுக்கு கொண்டுவந்து அதனை கோட்டாறு, வடசேரி, மணிமேடை, செட்டிக்குளம், இராமன்புதூர் என ஐந்து இடங்களில் போட்டு குறைந்த விலையில் விற்பனை செய்தார். மக்கள் நீண்ட வரிசையில் நின்று வாங்கிச் சென்றனர். தனது வாகனங்கள் மூலம் கிழங்கை எடுத்துச் சென்று கிராமப் புறங்களிலும் குறைந்த விலைக்கு விற்றுப் பசியைப் போக்கினார்.

இதுபற்றி செந்தமிழ் அருள்நெறிப் பேரவைத் தலைவர் புலவர் இராம சாமி கூறும்போது, “அன்றைக்கு அரிசி எட்டணாவாக இருந்தது. அதனால் கிழங்கை காலணாவுக்கு குறைந்த விலையில் விற்பனை செய்தார். அவ்வாறு விற்பனை செய்ததுகூட காசுக்காக அல்ல. சிலர் அதனை அதிகமாக வாங்கி அடுத்தவற்கு கிடைக்காமல் செய்து விடக்கூடாது என்பதற்காகத்தான். அவர், அவ்வாறு செய்யவில்லை என்றால் நிறையபேர் பட்டினியால் செத்திருப்பார்கள். அருமையான

கிழங்கு. அதனை அவித்தால் புட்டுபோல இருக்கும். அக்கிழங்கை மக்கள், 'பயோனியர் கிழங்கு' என்று அழைத்தனர்" என்கிறார்.

நாகர்கோவிலிலுக்கு முதன்முதலில் மின்சாரத்தைக் கொண்டுவந்த பெருமை பயோனியரையே சாரும். மக்களின் நலனுக்காக மின்சார விநியோகக் குழுமம் ஒன்றினை நாகர்கோவிலில் துவங்கினார். அதற்கான அனுமதியை திருவிதாங்கூர் மன்னரிடமிருந்து பெற்றார். திருவிதாங்கூர் அரசானது 55 ஆண்டுகளுக்கு மின்சாரம் உற்பத்தி செய்வதற்கும், அதனை விநியோகம் செய்வதற்கும் உரிமம் வழங்கியது. 1932ஆம் ஆண்டு திவானாக இருந்த எப்.ஓ. அகத்தின் நாகர்கோவில் மின்சார விநியோகக் குழுமத்திற்கு அடிக்கல் நாட்டினார். 1934இல் திவானாக இருந்த கபிபுல்லா குழுமக் கட்டிடத்தை திறந்து வைத்தார்.

நாகர்கோவிலில் நகர்மன்ற ஊழியர் ஒருவர் மாலைவேளை ஏணி மற்றும் புன்னை எண்ணெய் டப்பாவுடன் வருவார். அவர், சிறு விளக்கில் எண்ணெய் ஊற்றி திரியை பற்றவைத்து அதனை ஆங்காங்கே உயரமாய் நடப்பட்டிருந்த தூண்களில் வைத்துவிட்டுச் செல்வார். எண்ணையின் அளவு, நிலவு வரும் நேரத்தைக் கணக் கிட்டு அதற்கு தகுந்தாற்போல் ஊற்றி வைக்கப்படும். அவைதான் அன்றைய தெரு விளக்குகள். அவை மின்மினிப் பூச்சிபோல் மின்னி மின்னி எரிந்து கொண்டிருக்கும். இந்த விளக்குகளால் வெளிச் சத்தை பெரியளவில் அளிக்க முடியவில்லை. இரவு ஏழு மணி யானதும் தெருவில் இறங்கி நடக்க முடியாத அளவிற்கு இருள் குடி கொண்டிருக்கும். பவுர்ணமி தினங்களில் விளக்கு வைக்க மாட்டார்கள்.

முதன்முதலாக நாகர்கோவில் பகுதிகளில் பயோனியர் மின் இணைப்பை வழங்கினார். அவர், செர்மன் நிறுவனம் ஒன்றுடன் ஒப்பந்தம் செய்திருந்தார். தொடக்கத்தில் எல்லா கடைகளுக்கும் வீடுகளுக்கும் மின் இணைப்பு வழங்க முடியாவிட்டாலும் நாளடைவில் மின் இணைப்பு துரிதப்படுத்தப்பட்டது. நாகர் கோவிலில் மக்களின் நலனுக்காக நீளமான தேக்குக் கம்புகளை நட்டு, அதில் தெரு விளக்குகள் அமைத்தார். அவ்வாறு அமைக்கப்

பட்டபோது காழ்புணர்ச்சி காரணமாக நாகர்கோவில் நகரசபை பிரச்சனை செய்தது. அப்பொழுது நகரசபைத் தலைவராக இருந்தவர் எம். சிவதாணுபிள்ளை. அவர், நாகர்கோவில் நகருக்கு மின் விநியோகம் தேவையில்லை என தீர்மானம் நிறைவேற்றினார். அதற்கு காரணம் மின்சார உரிமை யாருக்கு சொந்தமாக இருக்க வேண்டும் என்பதற்காக அல்ல. தன்னை கவனிக்கவில்லை என்பதுதான். 1935 வரை தெருக்களிலுள்ள மின்சார விளக்கிற்கு போட்டியாக நாகர்கோவில் நகராட்சியினர் புன்னை எண்ணெயில் விளக்கு ஏற்றினார்கள். பயோனியர், நகரசபைமீது வழக்கு தொடர்ந்தார். வழக்கில் வெற்றியும் பெற்றார்.

இந்தியாவில் 1928இல் மும்பை, 1929இல் திருவனந்தபுரம், 1932இல் கோட்டயம், 1934இல் நாகர்கோவில் மற்றும் கொல்லம் ஆகிய நகரங்களுக்கு மின்சார சேவை வந்தது. நாகர்கோவிலில் அமைக் கப்பட்டிருந்த மின்சார தெரு விளக்குகள் ஐந்து இறக்கைகளைக் கொண்டதாக வித்தியாசமான முறையில் பல நிறத்தில் அமைக்கப் பட்டிருந்தது. நாகர்கோவில் நகரமெங்கும் வெளிச்சம் பளிச்சென இருந்தது. மின்சார விளக்கைப் பார்ப்பதற்காக பல ஊர்களைச் சார்ந்த மக்கள் மாலை வேளையில் நாகர்கோவில் நகருக்கு வருகை புரிந்தனர். இதுகுறித்து காட்டு இலாகா அதிகாரி சி. வேலுபிள்ளை, “இந்தியா முழுவதும் சுற்றி வருகிறேன். ஆனால், நாகர்கோவிலுக்கு நுழையும்போது சொர்க்கத்திற்குள் நுழைவதுபோல் பிரகாசமாகவும் விசித்திரமாகவும் உள்ளது” என்றார்.

பயோனியர் வளர்ச்சியின்மீது பொறாமைக் கொண்டவர்கள் பல்வேறு கோரிக்கைகளை வலியுறுத்தி வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர். இதனால் பயோனியரின் மின் துறையும் போக்கு வரத்துத் துறையும் பாதிப்பிற்கு உள்ளானது. பயோனியருக்கு எதிரான இப்போராட்டத்தில் சில புள்ளிகள் பின்புலமாக இருந்து செயல்பட்டனர். சீவா, போராட்டத்திற்கு தலைமை தாங்க அழைத்து வரப்பட்டார். வேலை நிறுத்தம் சம்பந்தமாக பேச்சு வார்த்தை நடத்த கலைவாணர் வருகை தந்தார். ஆறாவது நாள், கலைவாணர் தலைமையில் பயோனியர் திரையங்கில் வைத்து நடைபெற்ற பேச்சு வார்த்தையில் தொழிலாளர்கள் முன்னிலையில் சுமூகமான முடிவு

எட்டப்பட்டது. போராட்டம் கைவிடப்பட்டது. பயோனியர், போராட்டத்தையோ அல்லது போட்டியையோ விரும்புவதில்லை. அதனை உடனடியாக தீர்வுகாண முயற்சி செய்வார்.

திருவிதாங்கூர் கொச்சி முதலமைச்சராக இருந்த பட்டம் தாணு பிள்ளை 1956ஆம் ஆண்டு பயோனியர் மின்விநியோக குழுமத்தை அரசுடைமை ஆக்கினார். திருவிதாங்கூர் அரசு 8 இலட்சமும், சென்னை அரசு 4 இலட்சமும் இழப்பீடாக வழங்கியது. அதில் வேலை செய்த தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டபோது, அவர்கள் அரசுக்கு எதிராக போராட்டம் நடத்தினர். ஆர்.கே. இராம் மற்றும் சந்தானம் ஆகியோர் பயோனியரை தொடர்புகொண்டனர். பயோனியர், அரசிடம் பரிந்துபேசி தொழிலாளர்களுக்கு வேலையும் சலுகையும் கிடைக்க ஆவன செய்தார்.

நகரசபைத் தலைவராக இருந்த சிவதாணுபிள்ளை, கோலப்ப பிள்ளை போன்ற முக்கிய தலைவர்கள் பின்னாளில் பயோனியரை சந்தித்து தங்கள் செயலுக்கு வருத்தம் தெரிவித்தனர். அவர்களை அவர் இன்முகத்துடன் ஏற்றுக்கொண்டார். மின் விநியோகம் பயோனியரிடம் இருந்திருந்தால் இன்றைக்கு குமரி மண்ணில் மின்சார தட்டுப்பாடே இருந்திருக்காது. மின்சாரமும் குறைந்த விலைக்கு கிடைத்திருக்கும்.

ஒருதடவை சென்னைக்குச் செல்லும்போது, தமிழ்நாடு சட்டமன்ற உறுப்பினர் இராமசாமி பிள்ளையும் பயோனியரும் இரயிலில் வைத்து சந்தித்துக் கொண்டனர். இராமசாமிபிள்ளை என்பவர் பிரசா சோசியலிச கட்சி சார்பில் 1951இல் தோவாளை தொகுதியிலும், 1954இல் அகத்தீசுவரம் தொகுதியிலும் தேர்தலில் வெற்றிபெற்று கேரள சட்டமன்றத்தில் உறுப்பினராக இருந்தவர். 1956இல் கன்னியாகுமரி மாவட்டம் தமிழகத்தோடு இணைக்கப்பட்ட பிறகு கன்னியாகுமரி தொகுதியில் சுயேட்சையாக வெற்றிபெற்று தமிழ்நாடு சட்டமன்ற உறுப்பினராக இருந்தார்.

அப்பொழுது பயோனியர், “நீங்கள் ஏழைகளுக்காக தொழிலாளர் களுக்காகப் பாடுபடுகிறீர்கள். நீங்கள் உங்களைப் பற்றியோ, உங்கள் குடும்பத்தினரைப் பற்றியோ நினைக்கவில்லை. நட்டம்

ஏற்படும் பொழுதெல்லாம் நீங்கள் உங்கள் செல்வத்தைச் செல வழித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். அதனாலே நான் ஒன்று சொல்கிறேன். நீங்கள் இந்த காதோடு வாங்கி அந்த காதோடு விட்டுவிடாதீர்கள். நீங்கள் உங்களையும் கருத்தில்கொள்ள வேண்டும். இருபது ஏக்கர் நிலம் வாங்கி பதிவு செய்து கொள்ளுங்கள். நான் ரப்பர் வைத்துக் கொடுக்கிறேன். மாதம் 2000 ரூபாயாவது கிடைக்கும். அதை வைத்து நீங்கள் பிழைக்கலாம். நீங்கள் குடும்பச் சொத்துகளைத் தொலைக்கா தீர்கள்'' என்று அறிவுரை வழங்கினார். அதற்கு, இராமசுவாமி பிள்ளை, ''அப்படி நீங்கள் பேசக்கூடாது. நான் எதிர்கட்சித் துணைத் தலைவராக உள்ளேன். அப்படி வாங்கக்கூடாது. அப்படி வாங்குவது முறையுமல்ல. காமராசர் அவர்கள் என்னோடு அன்புடன் இருக்கக் கூடியவர். அவர்களுக்கு அது மரியாதையாகாது'' என்றார்.

அந்த காலத்தில், அரசியலை ஒரு சமூகப் பணியாகக் கொண்டு வேலை செய்தனர் அரசியல்வாதிகள். அப்படிப்பட்ட ஒருவர் தனது பூர்வீக சொத்தை சிறிது சிறிதாக இழப்பதனை பயோனியர் விரும்ப வில்லை. தாமாகவே முன்வந்து எந்தவித பலனும் எதிர்பார்க்காமல் அவருக்கு உதவி செய்ய விரும்புகிறார். அவரோ, நான் அப்படி வாங்குவது சரியல்ல என்கிறார். அதற்கு தன்னுடைய தலைவர் காமராசரை முன் உதாரணமாகக் காட்டுகிறார். இத்தனைக்கும் காமராசர் தலைமையிலான இந்திய தேசிய காங்கிரசை எதிர்த்து சுயேட்சையாக நின்று வெற்றி பெற்றவர் இராமசாமி பிள்ளை.

இராமசாமிபிள்ளை நல்லதொரு அரசியல்வாதி. பண்பட்ட சிந்தனை யாளர். திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரசுக்கு எதிராக களத்தில் நின்று தொடர்ந்து வெற்றிவாகை சூடியவர். அப்படிப்பட்ட நல்ல வருக்கும் அவரது குடும்பத்தாருக்கும் உதவ வேண்டும் என்கிற எண்ணம் பயோனியருக்கு இருந்தது. அந்த எண்ணம் நிறை வேறாமல் போனது.

5

# பயோனியரின் தொழிற்சாலைகள்

இரண்டாவது உலகப் போரின்போது பெட்ரோல் தட்டுப்பாடு மிகுதியாகக் காணப்பட்டது. வாகனங்களை இயக்க முடியவில்லை. பயணிகள் மிகுந்த சிரமத்திற்கு உள்ளானார்கள். பெட்ரோல் பெறுவதற்கு கூப்பன் முறை கொண்டுவரப்பட்டது. பயோனியர், சென்னை சிம்சன் நிறுவனத்திடமிருந்து எரிவாயு சக்தியை உற்பத்தி செய்யும் கருவி ஒன்றினை விலைக்கு வாங்கினார். அக்கருவியைக் கொண்டு தனக்குச் சொந்தமான வாகனத்தை ஓட்டியிருக்கலாம். அதன்மூலம் இலாபம் சம்பாதிக்கிற வழியைப் பார்த்திருக்கலாம். அவ்வாறு செய்யாமல் அக்கருவியைப் பிரித்துப் பார்த்து, அக் கருவியை எவ்வாறு தயாரித்திருக்கிறார்கள் என்பதனைக் கண்டறிந்தார்.

தான் கண்டறிந்ததன் மூலம் பெட்ரோல் இயந்திரத்திற்கு மாற்றாக சாதாரண விறகுக் கரியிலிருந்து எரிவாயு உற்பத்தி செய்து, அந்த எரிவாயுவைக் கொண்டு பேருந்துகளை இயக்கச் செய்யும் இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். அந்த நூதன முறையைப் பின்பற்றி இயந்திரங்களை உற்பத்தி செய்யும் பட்டறை ஒன்றினை 1942இல் துவக்கினார். அதற்கு, “பயோனியர் எரிவாயு தயாரிப்பாளர் பணிமனைகள்” எனப் பெயர் வைத்தார்.

மேலும், சென்னையில் செட்டிநாட்டு குமார ராசா சர். முத்தையா செட்டியாரை பங்காளியாகக் கொண்டு பயோனியர் கரிவாயு உற்பத்திப் பட்டறை ஒன்றினைத் துவங்கினார் பயோனியர். சென்னை சிம்சன் நிறுவனத்திற்கும், மதுரை டி.வி.எச். அய்யர் நிறுவனத்திற்கும் கரி உபயோகிக்கும் உற்பத்திப் பட்டறையை ஏற்பாடு செய்து கொடுத்தார். அதில் வேலை செய்வதற்கு குமரி மாவட்டத்திலுள்ள இளைஞர்களுக்கு முன்னுரிமை வழங்கினார்.

அங்கு தயாரிக்கப்பட்ட இயந்திரங்களை இந்தியா முழுவதும் குறைந்த விலைக்கு விற்பனை செய்தனர்.

பயோனியரின் சேவையைப் பாராட்ட தமிழகத் தொழில்துறை அமைச்சர் வி.வி. கிரி, சுப்பராயன், முனுசாமிபிள்ளை, இராமநாதன், பி. கோபால் ரெட்டி, கே.சி. சாக்கோ, கிண்டி பொறியியல் கல்லூரி முதல்வர் எ. விசுவநாதன், மந்திரி டி.எச்.எச். இராசன் ஆகியோர் நாகர்கோவில் வந்து பயோனியருக்கு நற்சான்று பத்திரம் வழங்கினர். தமிழகத் தொழில்துறை அமைச்சர் கிரி, “பயோனியர் கண்டுபிடித்த புதிய இயந்திரம் நாட்டிற்கு கிடைத்த வரப்பிரசாதம்” என புகழாரம் சூட்டினார். உலகப் போருக்கு பின்பு வெளிநாட்டி லிருந்து பெட்ரோல் கிடைக்கத் துவங்கியதால் மூன்று வருடத்திற்குப் பிறகு இப்பட்டறை நிறுத்தப்பட்டது.

பயோனியர், தனது வாகனத்தில் தேய்ந்துபோன டயர்கள், உபயோக மற்ற டியூப்கள் ஆகியவற்றை குப்பைத் தொட்டிகளில் போடமாட்டார். அவற்றை அலுவலகம் முன்புறமோ அல்லது பின்புறமோ குண்டு தோண்டி புதைத்துவிடுவார். எதற்காக இவர் இப்படி செய்கிறார் என பலருக்குத் தெரியாது. இதை தூக்கி தூர வீச வேண்டியதுதானே. இங்கே புதைத்துப்போடுவதால் என்ன இலாபம் இருக்கிறது என பலர் கேட்பதுண்டு. புதைத்துப் போட்டால் அது இடத்தை நிரப்பாது. எதற்காவது தேவைப்பட்டால் மீண்டும் எடுத்துக்கலாம் என்பார். இரண்டாவது உலகப்போர் ஆரம்பமானபோது ரப்பர் விலை மிகவும் ஏற்றம் கண்டது. சந்தையில் பழைய டயர்களுக்கு கிராக்கி ஏற்பட்டது. அப்பொழுது தன்னிடமிருந்த பழைய டயர்களை தோண்டி எடுத்து விற்பனை செய்தார். அவற்றிற்கு நல்ல விலை கிடைத்தது. அப்பொழுது அவரை பலரும் ஆச்சிரியமாகப் பார்த்தார்கள்.

1942இல் இரண்டாம் உலக யுத்தம் தொடங்கியபோது தொழிற் பயிற்சி பெற்ற இளைஞர்கள் மிகக் குறைவு. திருவனந்தபுரத்தில் ஒரு பொறியியல் கல்லூரி இருந்தது. நாகர்கோவிலில் சிறிமூலம் திருநாள் இராமவர்மா மகாராசா பெயரில் ஒரு நெசவு பயிற்சி பள்ளி இருந்தது. இராணுவத்திற்கு தொழிற்பயிற்சி பெற்ற மாணவர்கள்

அதிகம் தேவைப்பட்டனர். உடனடியாக தொழிற்கூடங்கள் கட்டி பயிற்சி கொடுப்பது அரசாங்கத்திற்கு சிரமமான ஒரு காரியமாக இருந்தது. அதனால் அரசானது வசதி வாய்ப்புகள் உள்ள பணிமனை களைத் தேர்வு செய்து யுத்த தொழிற்பயிற்சி மையம் என்கிற பெயரில் பயிற்சி கொடுக்க ஆரம்பித்தது.

சென்னை, மைசூர், கொச்சி, திருவிதாங்கூர் மாகாணங்களின்கீழ் செயல்படுவதற்கு தேசிய தொழிலாளர் நல தீர்ப்பாயம் ஒன்றினை சென்னையில் உருவாக்கி பயிற்சிப் பள்ளிகளை உருவாக்க மத்திய அரசு முற்பட்டது. அத்தீர்ப்பாயத்தின் தலைவராக வி. இராம கிருசுணா என்பவர் அரசால் நியமிக்கப்பட்டார். அவர், பயோனி யரைத் தொடர்புகொண்டு தெற்கு பகுதியில் தொழிற்பயிற்சி நிறுவனத்தை உருவாக்கி பயிற்சி அளிக்க கேட்டுக்கொண்டார். அதற்கு பயோனியர், “அவ்வாறு பயிற்சி அளித்தால் அது பிரிட்டன் அரசின் யுத்தத்திற்கு ஒத்துழைப்பு கொடுப்பதுபோல் ஆகுமே” என்றார். அதற்கு இராமகிருசுணா, “யுத்தத்திற்கு என்று இருந்தாலும் உங்கள் திருவிதாங்கூர் இளைஞர்களுக்கு தொழிற் பயிற்சி பெற வசதி கிடைக்கும். உங்கள் பணிமனையைப் போன்று பயிற்சி கொடுக்க வாய்ப்புள்ள வேறு பணிமனைகள் அங்கு இல்லை. அதனால் உங்கள் ஒத்துழைப்பு வேண்டும்” என்றார். அவரின் கோரிக்கைக்கு இணங்க 1942 ஆகத்து 1ஆம் தேதி யுத்தத் தொழில்நுட்ப பயிற்சித் திட்டம், பயோனியர் தொழில் வரையுறு என்ற பெயரில் ஒரு பயிற்சி நிலையமாக உருவாக்கப்பட்டது.

பயோனியர், இப்பயிற்சிப் பள்ளிக்காக வெட்டூர்ணிமடம் பணி மனையை ஒட்டியுள்ள பத்து ஏக்கர் நிலத்தை ஒதுக்கி, அதில் பயிற்சிப் பள்ளிக்கு வேண்டிய கட்டிடங்களை தனது சொந்த செலவில் மூன்று மாதத்திற்குள் கட்டி முடித்தார். பயிற்சி கொடுப்ப தற்கான ஆசிரியர்கள் அரிது என்பதால் தனது பணிமனையில் அனுபவம் உள்ளவர்களை இந்தப் புதிய பணிமனைக்கு ஆசிரியர் களாக நியமித்தார். இதுசம்பந்தமாக பயோனியர் அரசுக்கு ஒரு நிபந்தனை வைத்தார். ஆசிரியர்களை வேறு இடத்திற்கு மாற்றக் கூடாது. அரசுக்கு தேவைப்படும்வரை வைத்துக்கொள்ள வேண்டும். தேவையில்லாதபோது அவர்களை திரும்பவும் பணி

மனைக்கு அனுப்பிவிட வேண்டும். இந்த நிபந்தனையை அரசு ஏற்றுக்கொண்டதன் அடிப்படையில் ஐந்து ஆசிரியர்களையும் ஒரு மேற்பார்வையாளரையும் பயிற்சி நிலையத்திற்கு நியமித்தார்.

பல இளைஞர்கள் தொழில் கற்றுக்கொள்ள முன்வந்தனர். மொத்தம் 250 மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். சிலர், தொழில் பிடிக்காமல் இடையிலே போய்விடுவர் என்பதால் ஐம்பது மாணவர்கள் கூடுதலாக சேர்க்க அனுமதிக்கப்பட்டிருந்தனர். ஆக, மொத்தம் 300 பேர் தச்சுவேலை, பொருத்துநர், கொல்லவேலை, பிட்டர், லைன்மேன் ஆகிய படிப்புகளில் சேர்க்கப்பட்டனர். பயிற்சி காலம் மொத்தம் ஆறு மாதங்கள். மாணவர்களை ஊக்குவிக்கும் வகையில் பயிற்சிக் கட்டணமாக மாதம் ரூ 11/– உதவித் தொகை வழங்கப்பட்டது. ஆசிரியர்களுக்கான ஊதியம் மற்றும் பயிற்சிக்குத் தேவையான இயந்திரங்கள், உபகரணங்கள் ஆகிய அனைத்தையும் இந்திய அரசாங்கம் வழங்கியது.

தொழில் பயிற்சிக்கு மாணவர்களை தேர்வு செய்யும் முறையை பயோனியர் வித்தியாசமாகக் கையாண்டார். சிறு வேலைகளைச் செய்ய சொல்வார். கருவிகளை மேசையில் வைத்து அதன் பெயர் என்னவென கேட்பார். கருவிகளை கையில் எடுக்கச் சொல்வார். கருவிகளை கையில் எடுக்கும் முறையை வைத்து அவர்களைத் தேர்வு செய்வார். அவர் தேர்வுசெய்யும் முறையைக் கண்டு தேர்வுக் குழுவினர் ஆச்சிரியப்பட்டனர். திறமையின் அடிப்படையில் மாணவர்கள் தேர்வு செய்யப்பட்டனர். சாதியின் அடிப்படையிலும், பரிந்துரையின் அடிப்படையிலும் மாணவர்கள் தேர்வு செய்யப் படுவதை அவர் தவிர்த்தார்.

பேராசிரியர் எ. கோவிந்தபிள்ளை என்பவர் ஒரு காவல்துறை ஆய்வாளரின் பரிந்துரையுடன் தனது உறவினர் பையன் ஒருவனை அழைத்து வந்து தொழில்நுட்பக் கல்லூரியில் இடம் வேண்டி நின்றார். அதற்கு பயோனியர், "பரிந்துரைகளை நான் ஏற்றுக் கொள்வதில்லை. உறுப்பினர் சேர்க்கையும் முடிந்துவிட்டது. இனிமேல் ஒன்றும் செய்ய முடியாது" என்றார். தனக்கு படிப்பதற்கு வாய்ப்பும், உதவித் தொகையும் கிடைக்கும் என நம்பியவருக்கு

ஏமாற்றமே மிஞ்சியது. அந்த மாணவனின் குடும்பத்தில் நிலவிய ஏழ்மை நிலையை கேள்விப்பட்ட பயோனியர் நான்கு மாதத்தில் அந்த மாணவனை அழைத்து தொழில் கூடத்தில் வேலை போட்டுக் கொடுத்தார்.

பயோனியர், தொழில் நுட்பக் கல்லூரியின் முதல்வராக திறம்பட செயல்பட்டு வந்தார். நான்காம் வகுப்பு வரை படித்த பயோனியர் தொழில் கல்வி நிறுவனத்தின் முதல்வராக பணியாற்றி வந்தார் என்பது வியப்புக்குரிய செய்தியாகும். இதன் நிர்வாகக் குழு உறுப்பினர்களாக டி.எச். இராமசாமியும், எச். நதானியேலும் செயல்பட்டு வந்தனர். பள்ளியின் செயல்பாடுகளை நேரில் பார்வை யிட்ட இந்திய அரசின் தொழிலாளர்துறை மந்திரி சீவன்ராம் மற்றும் சென்னை மகாண மத்திய மந்திரி கூர்மையா ஆகியோர் பயோனியரைப் பாராட்டினர்.

1947இல் இப்பயிற்சி நிலையங்கள் தொடர வேண்டுமா ? தொடர்வ தாக இருந்தால் அதனை மாநில அரசிடம் ஒப்படைத்து விடலாமா ? என்பது குறித்து ஆய்வு செய்து அறிக்கை தாக்கல் செய்ய பாராளுமன்ற உறுப்பினர் ராவ் பகதூர் சிவராசு தலைமையில் ஒரு குழு நியமிக்கப்பட்டது. அக்குழு ஆய்வு செய்துவிட்டு மேற்படி பயிற்சி வகுப்புகள் தொடர வேண்டும் என்றும், சேர்க்கை மற்றும் பரிட்சை ஆகியவற்றை மத்திய அரசு நடத்த வேண்டும் என்றும், அதனை நிர்வகிக்கும் பொறுப்பை மாநில அரசிடம் விட்டுவிடலாம் எனவும் பரிந்துரை செய்தது.

1949இல் அதிக வசதியுள்ள தனியார் பயிற்சி நிலையங்களை தனது கட்டுப்பாட்டில் வைத்துக்கொண்டு ஏனைய மையங்களை மத்திய அரசாங்கம் மூடிவிட்டது. சிறப்பாக செயல்பட்ட பயோனியர் தொழில் பயிற்சி பள்ளி தொடர்ந்து செயல்பட அரசு அனுமதி அளித்தது. மாணவர்கள் எண்ணிக்கையை 250–லிருந்து 112ஆக குறைத்தது. இப்பயிற்சிக்கு முன்புபோல் ஒரு மாணவருக்கு மாதம் ரூ. 11/– வீதம் ஊக்கத்தொகை அளித்தது.

சனவரி 1, 1956 மொழிவாரி மாநிலம் பிரிக்கப்பட்டபோது சென்னை சர்க்கார் நிர்வாகம் மாநில அரசுக்கு மாற்றப்பட்டது. பயோனியர்

தொழில்பயிற்சி பள்ளியானது இருபத்திரெண்டு வருடங்கள் பயோனியர் பணிமனை வளாகத்தில் இயங்கியது. இதில், இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட மாணவர்கள் பயிற்சி பெற்றிருந் தார்கள். பல்வேறு வேலைகளில் தங்களை ஐக்கியப்படுத்திக் கொண்டார்கள். இப்பள்ளியில் பயின்று கொண்டிருக்கும்போதே தொழிலாளர் தேர்வில் சில மாணவர்கள் மத்திய அரசின் போபால் கெவி எலக்டிரிக்கல் நிறுவனத்தின் பொருத்துநர் பிரிவுக்கும், லைன்மேன் பிரிவுக்கும் தேர்வு செய்யப்பட்டனர்.

1962இல் இந்த தொழில் மையத்தை அரசு ஏற்று நடத்தியது. அதன் பிறகு, புதிய தொழில் மையத்தை கோணத்தில் அரசு கட்டியது. 1963இல் சென்னை மாகாண தொழில் மந்திரி வெங்கட்ராமன் புதிய கட்டிடத்தைத் திறந்து வைத்தார். அதுதான் தற்பொழுது கோணத்தில் இயங்கிவரும் அரசு தொழில் நுட்பக் கல்லூரி.

1943இல் பயோனியர் தெருவில் இருந்த அவரது பாரம்பரிய வீட்டை பயோனியர் புதுப்பித்துக் கட்டினார். அவருடைய வீடு கட்டி முடிவுறும் தருவாயில் இருந்தது. வீட்டு வேலையை முடிப்பதற்கு இறுதியாக தரை ஓடுகள் தேவைப்பட்டன. அவருடைய தேவைக்கு உடனடியாக தரை ஓடுகள் கிடைக்கவில்லை. அப்பொழுது ஓட்டுத் தொழிற் சாலை மங்களூரிலும் கொல்லத்திலும் இருந்தது. கொல்லத்திலுள்ள காரிசன் மற்றும் கிராசு பீல்டு நிறுவனத்திடம் கேட்டபோது அவசரமாக தரை ஓடுகள் கிடைப்பதற்கு சாத்தியமில்லை என்றனர்.

தரமான களிமண் நிறைந்த தேரேகால் புதூரில் 4 ஏக்கர் நிலத்தினை குத்தகைக்கு எடுத்து அதில் ஓட்டுத் தொழிற்சாலை கட்ட திட்ட மிட்டார் பயோனியர். அதனை இயக்குவதற்காக தொழில் வல்லுநர் களை மங்களூரிலிருந்து வரவழைத்தார். அவர்களால் தொழிற் சாலை உருவாக்கப்பட்டு புகைக் கூண்டும் கட்டப்பட்டது. வீட்டின் மேல் தளத்திற்கும் தரைத் தளத்திற்கும் தேவையான ஓடுகள் தயாரிக்கப்பட்டன. உற்பத்தியில் அவர் எதிர்பார்த்த தரம் அமையவில்லை.

ஆகவே, கொல்லத்திலுள்ள காரிசன் மற்றும் கிராசு பீல்டு நிறுவனத்தில் பணி செய்துவந்த சிவராமன், திவாகரன், சின்னப்

பிள்ளை மற்றும் அலெக்சாண்டர் ஆகிய தொழில்நுட்ப வல்லுனர் களை அழைத்துவந்து தரமான ஓடுகளை உற்பத்தி செய்தார். அவர்கள் வழியாக தொழிலாளர்களுக்கு பயிற்சி அளித்தார். அன்றைக்கு மட்டுமின்றி இன்றைக்கும் அத்தொழிற்சாலையில் தயாரிக்கப்படும் ஓடுகள் தரம் வாய்ந்ததாக இருந்து வருகிறது. குமரி மண்ணில் ஓட்டுத் தொழிற்சாலையை முதன் முதலில் துவங்கி பலருக்கு வேலை வாய்ப்பினை வழங்கியவர் பயோனியர்தான்.

நாகர்கோவிலை சார்ந்த எழுத்தாளர் செ. சிவசுப்பிரமணியம் என்பவர் சென்னை தேசிய காப்பீட்டு நிறுவனத்தில் ஆய்வாளராக பணிபுரிந்து வந்தான். அவன், திருவிதாங்கூரில் சிறந்த தொழில் அதிபராக திகழும் பயோனியரை சந்தித்து ஒரு காப்பீடாவது பெற வேண்டுமென விரும்பினான். அதுகுறித்து அவன், நாகர்கோவில் வந்த ஓரிரு நாட்களில் பயோனியரை சந்திக்க பல வழிகளில் முயற்சி செய்தான். பயோனியரோ பெரிய செல்வந்தர். சிறந்த தொழில் அதிபர். அனுபவத்தில் பக்குவப்பட்டவர். அவரைப் பார்க்க அனுமதி பெறுவது குறித்தும். 22 வயதான தன்னை எப்படி அவர் ஏற்றுக் கொள்வார் என்றும், அவரிடம் தன் தொழில் சம்பந்தமான பேச்சை எப்படி தொடங்குவது என்றும் யோசனை செய்தான். காலத்தை வீணாக்காமல் அவரிடம் தனது நிறுவனத்தின் சிறப்புகள் பற்றி எப்படியும் எடுத்துக்கூறிவிட வேண்டுமென உந்துதல் கொண்டான்.

அவரைப் பற்றி முழு விவரங்களையும் பல நண்பர்கள் வழியாக சேகரித்தான். அவரை அலுவலகத்திலே சந்திப்பது என முடிவு செய்தான். அவனுடைய நிறுவனம் பற்றிய துண்டுப் பிரசுரங்கள், கையேடுகள், காப்பீடு அட்டவணை ஆகியவற்றை எல்லாம் எடுத்துக்கொண்டு தனது ஊரான குலசேகரத்தில் இருந்து மணி மேடையின் பக்கம் இருந்த அவர் அலுவலகத்திற்கு புறப்பட்டான். அலுவலகத்தை அடைந்தவுடன் அங்கிருந்த பணியாளர் மூலம் தனது வருகையாளர் முகவரிச் சீட்டை அனுப்பி வைத்தபோது உள்ளே பயோனியர் பெரியவர் ஒருவரோடு பேசிக் கொண்டிருந்தார். அவர் விடைபெற்று வெளியே சென்றதும், அவனை உள்ளே அழைத்தார். பயத்துடனும் படபடப்புடனும் வணக்கம் கூறி நின்றான்.

பயோனியர், அவனை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தார். அதன் பின்னர் அவர் மேசைமேல் இருந்த வருகையாளர் முகவரிச் சீட்டை மீண்டும் ஒருமுறை பார்த்தார். காலியாக இருந்த நாற்காலியில் உட்காரச் சொன்னார். அவருடைய ஆளுமை மிகுந்த தோற்றப் பொலிவைப் பார்த்து வியந்துகொண்டு நின்ற அவன் உட்காரு வதற்கு தயங்கினான். மீண்டும் அவர் வற்புறுத்தவே நன்றி கூறிக்கொண்டு உட்கார்ந்தான்.

பயோனியர், அவரது ஊர் மற்றும் குடும்பம் குறித்து முதலில் விசாரித்தார். பின்பு, அவன் வந்த நோக்கத்தைக் கேட்டார். காப்பீடு பற்றியும், பொதுகாப்பீடு பற்றியும், தேசிய காப்பீட்டு நிறுவனத்தின் சிறப்புகள் பற்றியும் எடுத்துக் கூறினான். கையோடு எடுத்துவந்த காப்பீடு பற்றிய வெளியீடுகளையும் அவருக்குக் கொடுத்தான். அவர் பொறுமையாக எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு கடைசி யாக, ''நீ நமது ஊரைச் சார்ந்த பையன். திறமையாகப் பேசுகிறாய். விளக்கமாக எல்லாவற்றையும் எடுத்துச் சொல்கிறாய். நான் ஏற்கனவே ஒரு நிறுவனத்தில் காப்பீடு எடுத்துள்ளேன். ஆனால் உனக்கு உதவி செய்யும் வகையில் உங்கள் நிறுவனத்திற்கு காப்பீடு தருவேன். அடுத்தமுறை நீ வரும்போது அல்லது இப்பொழுது இருக்கும் காப்பீடு முடிவடையும்போது உனக்கு உதவுவேன்'' என்று கனிவோடு எடுத்துக் கூறினார். ''அவரது ஆதரவான வார்த்தை களும், தட்டிக் கொடுக்கும் பாங்கும், கனிவான பேச்சும், என்னை ஒரு பொருட்டாக மதித்து உட்காரச் சொன்ன பெருந்தன்மையும் என்னை பெரிதும் கவர்ந்தன'' என்கிறார் செ. சிவசுப்ரமணியம்.

பயோனியரின் மனைவி நாகம்மாள் தனது கணவரிடம் எதுவும் தனக்கென வாங்கிக் கேட்டதில்லை. 1952இல், தனது இறுதி காலத்தில் ஒரு இணை கம்மல் ஆசையாக வாங்கிக் கேட்டார். அதனை வாங்கிக் கொடுப்பதற்கு முன்பாக அவர் இருதய இயக்க கோளாறு காரணமாக காலமாகி விட்டார். அதற்காக பயோனியர் மிகவும் வருத்தம் கொண்டார்.

1954இல் தனது மனைவியின் நினைவாக நான்கு மகள்களுக்கும் ''நாகம்மாள் பவனம்'' என்கிற பெயரில் பட்டறை வளாகத்திலே

ஒவ்வொருவருக்கும் தனித்தனி வீடுகள் கட்டிக் கொடுத்தார். தனது சமூகத்திற்காகவும், தனது சமூகம் சார்ந்த மக்களுக்காகவும் நெசவுத் தொழிலை மேம்படுத்த விரும்பிய அவர், தனது மனைவி பெயரில் நாகம்மாள் ஆலையை உருவாக்க விரும்பினார். அப்பொழுது நாகர்கோவிலில் நூற்பாலை கிடையாது. அன்றைக்கு நூல் வாங்க வேண்டுமென்றால் திருநெல்வேலிக்குத்தான் செல்ல வேண்டும். திருநெல்வேலி சென்று வாங்கி வருவது என்பது அன்றைக்கு கடினமான ஒரு காரியமாகவே இருந்தது.

நாகம்மாள் நூற்பாலை ஆரம்பிப்பதற்கான பொறுப்பு திருநெல்வேலி கணபதி ஆலை இயக்குநராக இருந்த டி. கந்தையா பிள்ளையிடம் ஒப்படைக்கப்பட்டது. கால்கோள் விழாவிற்கு நாள் குறிக்கப்பட்டப் பிறகு இரவு பகலாக தொழிலாளர்கள் வேலை செய்து கொண்டிருந் தனர். ஒருநாள் இரவு 12.30 மணிக்கு தொழிலாளர்கள் வேலை செய்து கொண்டிருந்தபோது ஒருவர் தேநீர் கோப்பைகளுடன் அங்கு வந்தார். அதனைப் பார்த்த தொழிலாளர்கள் அசந்து விட்டனர். ஏனெனில் தேநீர் கோப்பைகளுடன் நின்றவர் வேறு யாருமல்ல; பயோனியர்தான். பதினைந்து மாதங்களில் ஆலைக்குத் தேவையான அனைத்து கட்டிடங்களும் கட்டி முடிக்கப்பட்டன. இக்கட்டிடத்திற்கான பணம் பயோனியரின் வருமானத்திலிருந்தும் இந்தியன் வங்கியிலிருந்தும் எடுக்கப்பட்டது. நாகர்கோவில் நாகம்மாள் மில்லின் வளர்ச்சிக்காகவே முத்தையா செட்டியார் நாகர்கோவிலில் இந்தியன் வங்கியின் கிளையைத் துவக்கினார்.

இந்நூற்பாலை சப்பான் நாட்டு தொழில் நுட்பத்துடனும் பாரத நாட்டுத் தொழில்நுட்பத்துடனும் துவங்கப்பட்டது. இந்த ஆலைக்குத் தேவையான இயந்திரங்கள் கொச்சி துறைமுகத்தில் வந்து இறங்கின. அந்த இயந்திரப் பொருள்களின் விலை பதினைந்து இலட்சம். அவற்றைக் கொண்டு வருவதற்கான ஏற்பாட்டினைச் செய்ய ஏ. சவரிமுத்து என்பவர் அனுப்பி வைக்கப்பட்டார். அவர், எர்ணாகுளம் உட்லன்ட் ஒட்டலில் இரண்டு மாதங்கள் தங்கியிருந்து கொச்சியிலிருந்து கொல்லத்திற்கு படகு மூலம் அனுப்பி வைத்தார். அங்கிருந்து பயோனியர் லாரி மூலம் நாகர்கோவிலுக்கு எடுத்து வரப்பட்டன.

ஆலை நிர்வாகப் பொறுப்பு காண்டியாவிடமும் ஆலைக்குத் தேவையான காட்டனை வாங்கும் பொறுப்பு தூத்துக்குடியைச் சார்ந்த சாமி அய்யாவிடம் ஒப்படைக்கப்பட்டன. காட்டன் குறிப்பாக தேனியிலிருந்தும் வாங்கப்பட்டன. இருபத்தி ஐயாயிரத்திற்கு மேற்பட்ட கதிர்கள் இயங்கும் வகையில் ஆலையை உருவாக்கினார். திருவிதாங்கூர் கொச்சி முதலமைச்சர் கோவிந்தமேனன் நாகம்மாள் ஆலையை 11 நவம்பர் 1955 அன்று துவங்கி வைத்தார். பகவதியம்மாள், நிர்வாக இயக்குநராக இருந்து செயல்பட்டார். இந்த ஆலை, பலருக்கு வேலை வாய்ப்பு கிடைப்பதற்கு உதவிகரமாக இருந்தது. நானூறுக்கு மேற்பட்டோர் அதில் பணி செய்தார்கள். தற்பொழுதும் இந்த ஆலை மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

போக்குவரத்துத்துறை தேசியமயம் ஆக்கப்பட்டபோது தனக்கு ஏற்பட்ட இழப்பை சரிசெய்ய கடன் உதவி வழங்கிய பாலாய் மத்திய வங்கி மேலாளர் சாக்கோவை நாகம்மா ஆலையின் இயக்குநர் ஆக்கினார். ஆலை துவங்குவதற்கு தனக்கு அனுமதி கிடைக்க உதவிய பாராளுமன்ற உறுப்பினர் நேசமணியின் சார்பில் தானே பங்குத் தொகை செலுத்தி அவரையும் இயக்குநராக நியமனம் செய்தார். தனக்கு ஏதாவது ஒருவகையில் யாரெல்லாம் உதவி செய்தார்களோ அவர்களை அவர் மறக்கவில்லை. அவர்களுக்கு இவ்வாறாக பலவகையில் கைம்மாறு செய்தார்.

நாகம்மாள் ஆலை நல்ல முறையில் இயங்கிக் கொண்டிருக்கும் போது கன்னியாகுமரி மாவட்டம் சென்னையோடு இணைவதற்கு உறுதுணையாக இருந்த தியாகிகளின் குழந்தைகளுக்கு நாகம்மாள் ஆலையில் வேலை கொடுக்க வேண்டும் என்று சொல்லி ஒரு பெயர் பட்டியலை திருவட்டார் சட்டமன்ற உறுப்பினர் செ. சேம்சு வழியாக நாகர்கோவில் பாராளுமன்ற உறுப்பினர் நேசமணி கொடுத்து அனுப்பினார். அப்போது அதனைப் பெற்றுக்கொண்ட பயோனியர், “நேசமணிக்கு ஒரு தொழில் நடத்துவது எவ்வளவு சிரமம் என்று நிச்சயமாக தெரிந்திருக்க வாய்ப்பில்லை. இருந்தாலும், நேசமணி கொடுத்து அனுப்பிய பட்டியலின்படி வேலை கொடுக்கிறேன்” என்றார்.

தொழில் சம்பந்தப்பட்ட வழக்குகளில் பொதுவாக முதலாளிகள் நீதிமன்றம் வருவதில்லை. அவர்கள் சார்பாக வழக்கறிஞரே வாதிடுவார். பயோனியர், தனது வழக்கு சம்பந்தப்பட்ட விசயங்களில் நீதிமன்றம் வருவதுண்டு. பயோனியருக்காக திருவனந்தபுரத்தைச் சார்ந்த வழக்கறிஞர் இராமலிங்க அய்யரும், கிருசுணன் குட்டியும் வாதிடுவர்.

ஒருதடவை ற்றி.பி. நீதிமன்றத்தில் பயோனியர் நிறுவனம் சம்பந்தமான வழக்கு நடைபெற்றுக் கொண்டிருந்தபோது வழக்கறிஞர் இராமலிங்கம் அய்யர் ஒரு கருத்தைச் சொல்லத் தவறிவிட்டார். பயோனியர் இடைமறித்து தனது கருத்தை எடுத்துரைத்தார். இதைக்கேட்ட நீதியரசர் இராமைய்யாபிள்ளை, பயோனியரைப் பார்த்து "நீதிமன்றத்தில் இவ்வாறெல்லாம் பேசக்கூடாது" என கண்டித்தார். பயோனியர், கழுத்தில் கிடந்த துவர்த்தை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு மிகவும் பணிந்து, "நீதிபதி அய்யா, எனது வழக்கறிஞர் ஒரு பாயிண்டை சொல்லத் தவறிவிட்டார். அதனால்தான் நான் கூற நேர்ந்தது" என்றார். அதனைக்கேட்டு நீதியரசரே சிரித்துவிட்டார்.

6

# பயோனியரின் இறுதி நாட்கள்

வசதி வாய்ப்பு பெருகிய காலத்திலும் பயோனியர் மிக எளிமையான வாழ்க்கை வாழ்ந்து வந்தார். காலையில் கஞ்சி குடிக்கும் பழக்கம் உடையவர். மதிய வேளையில் சோறும், இரவு வேளையில் இட்லி அல்லது ரவா, பால் மற்றும் பழங்கள் சாப்பிடுவார். அவர் மது குடிப்பதில்லை. புகையிலை தொட்டதில்லை. தனது குடும்பத்தைச் சார்ந்தவர்கள் அனைவரும் ஒரே வீட்டில் இருக்க வேண்டும் என்பதனை அவர் விரும்பினார். ஏனெனில் தனது குடும்பத்தில் உள்ள அனைவரையும் அவர் நேசித்தார். அவர் குடும்பத்தில் 25க்கு மேற்பட்டவர்கள் இருந்தனர். அவர்கள் ஒரே சமையலறையைத்தான் பயன்படுத்திக் கொண்டனர்.

பயோனியர், குமரி பகவதி அம்மன்மீது மிகுந்த பக்தி வைத்திருந்தார். ஒருமுறை சென்னைக்கு செல்லும் வழியில் செங்கல்பட்டில் கிருபானந்த வாரியாரின் கதாபிரசங்கம் நடை பெற்றுக் கொண்டிருந்தது. காரை ஓரமாக நிறுத்தச் சொல்லிவிட்டு அதனைக் கேட்டுக் கொண்டிருந்தார். அதன்பிறகு, கிருபானந்த வாரியார் தங்கும் இடம் சென்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். அன்றுமுதல் அவர் கிருபானந்தருக்கு மிகவும் நெருக்கமானவராக இருந்தார். கிருபானந்தர், நாகர்கோவில் வரும்போதெல்லாம் அவரை வரவேற்று தங்குவதற்கும், அவரது நிகழ்ச்சிகள் நடப்பதற்கும் ஏற்பாடு செய்து கொடுப்பார்.

எளிமையான முறையில் ஆடை அணிந்து கொள்வார். வெள்ளை நிற ஆடையையே விரும்பி அணிவார். கள்ளம் கபடம் இல்லாதவர். உதவி கேட்டு வருபவர்களுக்கு தாராளமாக உதவி செய்வார். எப்பொழுதும் தோளில் துவர்த்து போட்டிருப்பார். அன்றைக்கு அதனை வடசேரி துவர்த்து என்பார்கள். வடசேரி துவர்த்து மிகவும் பிரபலாமானது. தமிழர் பண்பாடான வேட்டியையே அணிந்திருப்பார்.

கம்பீரமான உடல்வாகை கொண்டவர். அதிகாலை நான்கு மணிக்கு எழுந்து காலைக் கடன்களை முடித்துவிட்டு ஏழு மணிக்குள் பண்ணைக்கு சென்றுவிடுவார். இடைப்பட்ட நேரத்தில் மணிமேடை பகுதியிலுள்ள அலுவலகங்களுக்கு வருவார். இரவு ஒன்பது மணிக்குத்தான் வீட்டிற்கு செல்வார். வசதி வாய்ப்புகள் வந்தபிறகும் அவர் தங்கத்தில் மோதிரமோ செயினோ அணிந்து கொண்டது இல்லை.

தொழில் கூடங்களில் இருக்கும்போது தொழிலாளர்களோடு சேர்ந்துதான் உணவு உண்பார். விழா நாட்களில் தொழிலாளர் களுக்கு அவருடைய வீட்டில் விருந்து வழங்குவார். உணவினை அவரும் அவரது மனைவியும் பரிமாறுவார்கள். பரிமாறியவுடன் தொழிலாளர்களுடன் அமர்ந்து உணவு உண்பார்கள். முதலாளி தொழிலாளி நினைப்பை மறக்கடிப்பார். எல்லோரிடமும் சிரித்துப் பேசுவார். தொழிலாளர்கள் வேலை செய்யும்போது அவர்களுடன் இணைந்து வேலை செய்வார். ஒவ்வொரு தொழிலாளரையும் பெயர் சொல்லி அழைப்பார். அவ்வளவு நெருக்கமாக தொழிலாளர்களோடு இருந்தார். தொழிலாளர்கள் வாங்கும் சம்பளம் வீட்டிற்கு போய் சேருகிறதா என்பதையும் கண்காணிப்பார்.

பயோனியர், தன்னை நாடிவந்த பலருக்கு பல வழிகளில் உதவி செய்திருக்கிறார். 1950ஆம் ஆண்டு நாகர்கோவில் காட் கிறித்தவ கல்லூரியில் பட்ட வகுப்புகள் துவங்கப்பட்டன. அதற்கு முதல் நன்கொடையாக எட்டாயிரம் ரூபாய் வழங்கினார். நாகர்கோவில் மகளிர் கிறித்தவ கல்லூரிக்கு நீள அரங்கம் ஒன்றினைக் கட்டிக் கொடுத்தார். இப்பொழுது, அது அறிவியல் ஆய்வுக் கூடமாகச் செயல்பட்டு வருகிறது. புத்தேரி கேத்தரின் பூத் மருத்துவமனையின் அறுவை சிகிட்சை அரங்கத்திற்கு தரை ஓடுகள் அமைத்துக் கொடுத்தார்.

பூதான இயக்கத்திற்காக பாளையங்கோட்டையில் தனக்கு சொந்தமான நிலத்தை இலவசமாக வழங்கினார். பாளையங் கோட்டை சாராள் தக்கர் மகளிர் கல்லூரிக்கு பேருந்து ஒன்றினை அன்பளிப்பாக வழங்கினார். வடசேரி திருவள்ளுவர் வாலிபர்

சங்கத்திற்கு பொதுமக்கள் உதவியுடன் கட்டிடம் ஒன்றினைக் கட்டிக் கொடுத்தார். சுசீந்திரம் தெப்பத் திருவிழாவிற்கு முதல் முதலாக மின்சார இயந்திரம் வழங்கி உற்சவம் சிறப்பாக நடக்க ஆவன செய்தார். திருச்செந்தூர் மற்றும் வள்ளியூரில் சாலியர் மாடம் கட்டி முடிப்பதற்கு நிதி வழங்கினார்.

தன்னிடம் தொடக்கத்தில் கணக்காளராக வேலை பார்த்த புத்தேரி நடராச பிள்ளைக்கு இராமவர்ம புரத்தில் வீடு ஒன்றினைக் கட்டிக் கொடுத்தார். தனக்கு குறைந்த வட்டிக்கு பணம் கொடுத்து உதவிய வேம்பு அய்யரின் மகன் வி.எச். மணி அய்யருக்கு கார் ஒன்றினை வாங்கிக் கொடுத்தார். வேம்பு அய்யர், தனது 84–வது பிறந்தநாளை கொண்டாடியபோது அவ்விருந்திற்கு தேவையான அனைத்து பொருள்களையும் வாங்கிக் கொடுத்தார். தனக்கு சென்னையில் வேலை வாங்கிக் கொடுத்த கே.என். சிவராச பிள்ளைக்கு ஒவ்வொரு தீபாவாளி அன்றும் புதிய துணிமணிகள் எடுத்து அனுப்பி வைப்பார். ஓணப் பண்டிகை அன்று தனக்கு விருப்பமுள்ள நபர்களுக்கு வடசேரி காய்கனிகளையும் சூரங்குடி மாங்காய் களையும் சின்ன கடவத்தில் வைத்து அதனை வீட்டிற்கு கொண்டு கொடுப்பார். அவர்களிடம் தனது மகிழ்ச்சியை வெளிப்படுத்துவார்.

இலட்சுமி காந்தம் கொலை வழக்கு சம்பந்தமாக கலைவாணர் N.S. கிருசுணன் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார். அவர்மீது குற்றம் சாட்டப்பட்ட நிலையில் வழக்கு லண்டன் மாநகரிலுள்ள பிரிவி கவுன்சிலுக்கு சென்றபோது அவருக்கு பொருளாதார உதவி செய்ய யாரும் முன்வரவில்லை. அவருடைய மனைவி நகைச்சுவை அரசி டி.எ. மதுரம் நாகர்கோவில் வந்து பயோனியரை அணுகியபோது, அவர் கேட்ட தொகை ரூ 40,000/–த்தைக் கொடுத்து உதவினார். அவ்வழக்கிலிருந்து விடுதலை பெற்றபிறகு கலைவாணர் கிருசுணன் நாகர்கோவில் வந்து பயோனியரைச் சந்தித்து கண்ணீர் மல்க நன்றி கூறினார். தனது கார் ஓட்டுநர் குற்றாலத்திற்கு பயோனியர் திரையரங்கம் அருகில் வீடு ஒன்றினைக் கட்டிக் கொடுத்தார்.

இவ்வாறாக அவர் பலருக்கு உதவி செய்யும் வள்ளலாக இருந்தார். சாதி, மதம் பார்த்து அவர் யாருக்கும் உதவி செய்ததில்லை. அவருடைய தொழிலுக்கு அவர் தம்பிகள் நெல்லையப்பன் மற்றும் நாகமணி ஆகியோர் உறுதுணையாக இருந்தனர். ஒரு தொழில் மேதையாக, ஆராய்ச்சியாளராக, படிக்காத மேதையாக வாழ்ந்த அவருடைய வாழ்க்கை இளைய சமூகத்திற்கு வழிகாட்டியாக இருக்கிறது. உங்களுடைய வெற்றிக்கு என்ன காரணம் என கேட்ட போது அவர் அளித்த பதில், “எதுவுமில்லை; கடின உழைப்புதான்” என்றார்.

அமராவிளையை சேர்ந்த நல்ல சிவம் என்பவர் சமூக சீர்திருத்தத் திலும் சுயமரியாதை சிந்தனையிலும் அதிகம் ஈடுபாடு கொண்ட வராக இருந்தார். அந்த ஆர்வத்தில் அவர் பாலராமபுரத்தைச் சார்ந்த காமாட்சி என்ற விதவைப் பெண்ணை திருமணம் செய்ய முடிவு செய்தார். அவருடைய சமுதாயத்திலும் குடும்பத்திலும் மிகப்பெரிய அளவில் எதிர்ப்பு கிளம்பியது. இதனால் திருமணத்தை வடசேரியில் வைத்து நடத்துவதென முடிவு செய்தார்.

‘தமிழன்’ பத்திரிகை நடத்திவந்த ஆசிரியர் சிதம்பரம்பிள்ளை இத்திருமணத்தை ஈ.வெ. இராமசாமி முன்னிலையில் நடத்துவது சிறப்பாக இருக்குமென கருத்து தெரிவித்தார். இருந்தாலும், நகரத்தில் மிகப்பெரிய மனிதராக வலம்வரும் பயோனியரை அழைத்தால் நன்றாக இருக்குமெனவும் கருதினார். அவரும் இதற்கு ஆதரவு தருவதாக உறுதியளித்தார். பெரிய எதிர்ப்புகளுக்கு மத்தியில் தனது கோல்டன் திரையரங்கில் திருமணத்தை நடத்த பயோனியர் ஏற்பாடு செய்து கொடுத்தார். ஈ.வெ. ராமசாமி முன்னிலையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. மறுமணத்தை பயோனியர் ஆதரித்தது குமரிவாழ் மக்கள் மத்தியில் ஒரு புதிய எழுச்சியை ஏற்படுத்தியது.

பயோனியர் அரசியல்வாதிகளைத் தவிர்த்து வந்தார். அரசியல் வாதிகள், பணம் கேட்டு வருவதை அவர் அதிகமாக விரும்ப வில்லை. ஒருவருக்கு பணம் கொடுத்து இன்னொருவரை அவர் பகைத்துக்கொள்ள விரும்பவில்லை. அதேவேளையில் தன்னிடம்

வேலை பார்த்த தொழிலாளர்களின் குடும்ப திருமணங்களுக்கும், மருத்துவ சிகிட்சைகளுக்கும், பிரசவச் செலவிற்கும் தாராளமாகப் பண உதவி செய்தார்.

அவருடைய வயதான காலத்தில் பயோனியரின் உடல்நிலை மோசமானது. மருத்துவர் மத்தியாசு வீட்டிற்கு வந்து அவரது உடல் நிலை குறித்து ஆய்வு செய்துவிட்டு மருந்து எழுதி கொடுத்துச் செல்வார். அடிக்கடி வீட்டிற்கு வந்து அவரது உடல் நிலையைக் கவனித்துக்கொண்டார். இருப்பினும், அவரது உடல் நிலையில் எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லை. அவரது அடிவயிறு நாளுக்குநாள் வீங்கிக்கொண்டு இருந்தது. மத்தியாசு, அவரை வேலூர் மருத்துவமனைக்கு கொண்டு செல்லும்படி அறிவுரை கூறினார்.

வேலூர் கொண்டு செல்வதற்கு முன்பாக ஆகத்து 1960இல் சர்.சி.பி. இராமசாமி அய்யர் பயோனியரை பார்ப்பதற்காக வீட்டிற்கு வந்தார். பயோனியர், முன் அறையில் கட்டிலில் படுத்திருந்தார். அங்கு வந்த அவரால் பயோனியரை அடையாளம் கண்டுகொள்ள இயலவில்லை. வீட்டிலுள்ளவர்களிடம் “பயோனியர் எங்கே ?” என்றார். “இன்னா படுத்திருங்காங்க” என்றனர். அவரது உடல் நிலையைப் பார்த்த இராமசாமி அய்யர் அதிர்ச்சியுற்றார். பதினைந்து நிமிடங்கள் பயோனியரிடம் பேசிக்கொண்டிருந்தார். கிளம்பும்போது வீட்டில் உள்ளவர்களிடம் அவரை நல்ல முறையில் கவனிக்கும்படி கேட்டுக் கொண்டார். அவரை சந்திக்க சர். ராசா முத்தையா செட்டியார் வருகை புரிந்தார். அவரை சந்தித்து ஆறுதல் கூறிச் சென்றார்.

வேலூர் மருத்துவமனைக்கு செல்லும் முன்பாக பயோனியர் தனது இரப்பர் பண்ணைக்கு செல்ல விரும்பினார். வீட்டிலுள்ளவர்கள் இந்த நிலையில் அங்குப் போக வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டனர். உடல்நிலை மேலும் மோசமடையும் என்று சொன்ன பிறகும் அவர் அங்கு செல்ல வேண்டுமென்பதனை வலியுறுத்தினார். அவரது விருப்பத்தின்பேரில் இரப்பர் பண்ணைக்குச் செல்வதென முடிவு செய்யப்பட்டது. கிளம்புவதற்கு முன்பாக பயோனியர், ரொட்டி நிரப்பபட்ட டப்பாக்களை கடைக்குச் சென்று

வாங்கி வரும்படி தனது கார் ஓட்டுநர் குற்றாலத்தைப் பணித்தார். அவர் வாங்கி வந்தவுடன் வாகனம் இரப்பர் பண்ணைக்கு புறப் பட்டது. வாகனம் மிக நிதானமாகவும் கவனமாகவும் சென்றதால் பண்ணையை அடைவதற்கு ஒரு மணிக்கூர் நேரம் ஆனது.

பண்ணையை அடைந்தபோது அங்கு வேலை செய்து கொண்டி ருந்த நூற்றிற்கு மேற்பட்ட தொழிலாளர்கள் அவரைக் காண ஓடி வந்தனர். அவரைப் பார்த்த அவர்கள், "முதலாளி, முதலாளி" என அழைத்துகொண்டே கண்ணீர் விட்டனர். அவர்களோடு அங்கு கூடியிருந்த அவர்களுடைய குழந்தைகளுக்கு ரொட்டிகளை வழங்கும்படி கேட்டுக்கொண்டார். அவர்களைப் பார்த்தமட்டிலே பயோனியர் அவர்களின் அன்பையும் பாசத்தையும் உள்ளார்த்தமாக உணர்ந்தார். ஒரு மணிக்கூர் நேரம் அவர்களோடு அங்கே தங்கி பேசிக் கொண்டிருந்தார். வேலூர் கிளம்புவதற்கு முன்பாக 24 செப்டம்பர் 1960 நாகம்மாள் ஆலைக்கு தனது மூத்த மகள் என். பகவதி அம்மாளை பொது மேலாளராக அறிவித்தார். அவருடைய சொத்துக்கள் அனைத்தையும் தனது நான்கு மகள்களின் பெயரில் சம அளவில் உயிலாக எழுதி வைத்தார்.

28 செப்டம்பர் 1960 காலை 9 மணிக்கு வேலூர் கிளம்பும்போது தன்னோடு தனது மூத்த மருமகன் கே. பத்மநாபன் மட்டும் துணைக்கு வந்தால் போதும் என்றார். வாகனம் செல்லும் வழியில் தனது நண்பர் முகம்மது முத்தப்பாவை பார்க்க வேண்டுமென விரும்பினார். அவரது கடை முன்பாக வாகனம் நிறுத்தப்பட்டது. முத்தபா வெளியே வந்து கண்ணீர் மல்க அவரை சந்தித்தார். அவரது மருமகன் கே. பத்மநாபனிடம், "அவரை நல்ல முறையில் கவனித்துக் கொள்ளுங்கள். அவருடைய உடல்நிலை குணமடைய இராமரிடம் பிரார்த்தனை செய்கிறேன்" என்றார். அதன்பிறகு, இரவு நேரத்தில் வாகனம் நேராக சென்னை சென்றடைந்தது. பகலில் வாகனம் வேலூர் கிறித்தவ மருத்துவக் கல்லூரி மருத்துவ மனைக்குச் சென்றது. ஏனெனில், 28 செப்டம்பர் வரும்படி மருத்துவர் கேட்டு கொண்டிருந்தனர்.

மருத்துவமனைக்குச் சென்றதும் மருத்துவர் எ.எச். பென் அவரை ஆய்வு செய்துவிட்டு சிறப்பு வார்டில் அனுமதிக்கும்படி கேட்டுக் கொண்டார். அதன்பிறகு மருத்துவர் சோமர் வில்லே அவரை ஆய்வு செய்துவிட்டு அவரது உடல் நிலை முன்னேற்றம் அடைவதற்கான மருந்துகளை எழுதிக் கொடுத்தார். அவர்களால் நோயைக் கண்டு பிடிக்க முடியவில்லை. அவருடைய உடல்நிலை நாளுக்குநாள் மோசமாகிக் கொண்டிருந்தது. அவருடைய உடலில் இரத்த அழுத்தம் குறையத் துவங்கியது. அதனை சரி செய்வதற்காக ஐ–வி ஏற்றப்பட்டது. சின்ன அறுவை சிகிட்சையும் செய்யப்பட்டது. இருப்பினும், அக்டோபர் 16 அன்று அவர் தனது சுயநினைவை இழந்தார். இரத்த அழுத்தத்தை சரியான அளவில் கொண்டு வருவதற்கும், அவரை மீண்டும் நினைவுக்குக் கொண்டு வருவதற்கும் மருத்துவர்கள் முயற்சி செய்தனர். இருப்பினும் அவர்களது முயற்சி வெற்றி பெறவில்லை.

18 அக்டோபர் 1960 மாலை 3.00 மணிக்கு பயோனியர் மண்ணுலகை விட்டு மறைந்தார். அப்பொழுது அவருக்கு வயது 63. எந்தவொரு கெட்ட பழக்கமும் இல்லாததால் அவரது நோயை பிரேதப் பரிசோதனை மூலம் ஆய்வு செய்ய மருத்துவர்கள் விரும்பினர். அதற்கு அவருடைய மருமகனும் சம்மதம் தெரிவித்தார். அவ்வாறு ஆய்வு செய்தபோது உடலின் உட்பகுதியிலுள்ள நிணநீர் சுரப்பி சரியாக செயல்படாமல் அவருடைய கழுத்துப் பகுதி விரிந்து கடினமாக இருந்ததைக் கண்டனர். அதன்மூலம் அவருக்கு புற்று நோய் ஏற்பட்டு, அது அதிகரித்திருந்தது உறுதி செய்யப்பட்டது. அன்னாரின் மறைவுச் செய்தியைக் கேட்டு குமரி மக்கள் ஆழ்ந்த கவலை அடைந்தனர்.

அவரது உடல் அன்று இரவு ஒன்பது மணிக்கு வேலூர் மருத்துவ மனையிலிருந்து நாகர்கோவிலுக்கு எடுத்துவரப்பட்டது. காலை பத்து மணிக்கு நாகர்கோவிலை அடைந்தபோது நீண்ட வரிசையில் மக்கள் காத்து நின்றனர். அன்று மதியம் சுமார் 2.45 மணிக்கு அவரது இறுதிச் சடங்கு அவரது இல்லத்திலுள்ள வளாகத்தில் நடை பெற்றது. அவர் மரித்த மூன்றாவது நாள் பொதுமக்கள் அவரின் சாம்பலை கரைப்பதற்காக காலை வேளையில் நாகம்மாள்

பவனத்திற்கு வந்து சேர்ந்தனர். சாம்பலானது அலங்கரிக்கபட்ட வாகனத்தில் எடுத்து செல்லப்பட்டது. நீண்ட வரிசையில் பொது மக்கள் வாகனத்தின் பின்னே அணிவகுத்து சென்று கொண்டிருந் தனர். கன்னியாகுமரியை அடைவதற்கு இரண்டு மணி நேரம் ஆனது. வழியெங்கும் பித்துக்குளி முருகதாசின் பாடல் ஒலிக்கப் பட்டது. அன்னாரின் சாம்பலானது காந்தி மண்டபம் அருகிலுள்ள கடலில் கரைக்கப்பட்டது. இப்படிப்பட்ட ஒரு சிறப்புமிக்க ஊர்வலம் குமரி மாவட்டத்தில் யாருக்கும் நடைபெற்றதில்லை.

பயோனியரின் நம்பிக்கைக்குப் பாத்தியமாக இருந்த கார் ஓட்டுநர் குற்றாலம், இனிமேல் யாருடைய வாகனத்தையும் ஓட்டுவதில்லை என சபதம் செய்தார். பயோனியரின் மூத்த மகள் என். பகவதி யம்மாள் கேட்டுக் கொண்டதன்பேரில் அவருடைய காரை ஓட்டு வதற்கு முன்வந்தார். பயோனியரின் நினைவாக அவரது மூத்த மருமகன் கே. பத்மநாபன், பயோனியர் குமாரசாமி கல்லூரியை 1967இல் நிறுவினார். அதைப்போன்று அவருடைய தம்பி நாகமணி, அவரை நினைவு கூரும் வகையில் பயோனியர் குமாரசாமி நினைவு சுற்றுலா இல்லம் என்ற தங்கும் விடுதியை வேப்பமூடு பகுதியில் அமைத்தார். பயோனியர், நாகர்கோவிலில் காகித நிறுவனம் ஒன்றினைக் கட்ட வேண்டுமென நினைத்திருந்தார். அது, நிறை வேறாமலே போய்விட்டது.

அவரது மறைவு குமரி மண்ணிற்கு பேரிழப்பாகும். அவர் மறைந் தாலும் இன்றும் மக்கள் மனங்களிலும் வரலாற்றிலும் வாழ்ந்து வருகிறார். 63 ஆண்டுகள் மட்டுமே அவர் வாழ்ந்தாலும் 600 ஆண்டு களுக்கான முன்னேற்றத்தைப் படைத்துவிட்டுச் சென்றுள்ளார். ஒரு அரசன் செய்ய முடியாததை ஒரு சாதாரண மனிதராக இருந்து செய்தார். அவரால் பயோனியர் என்கிற பெயர் மிகவும் பிரபலமா கியது. பயோனியர் என்றால் அறிவுத்துறை அல்லது பண்பாட்டுக் கூறு வளர்ச்சிக்கு வித்திடுபவர் அல்லது குறிப்பிட்ட பகுதியில் குடியேறி வளர்ச்சியை ஏற்படுத்துபவர் அல்லது முன்னோடியாக இருப்பவர் அல்லது முன்னோடியாக நின்று வழிகாட்டுபவர் என்று பொருள்.

அவர், தனது பேருந்திற்கு வைத்த பெயர் அவருக்கே பொருத்தமாக இருந்ததால் அப்பெயர் அவராகவே நிலைத்துவிட்டது. அவர், பயோனியர் என்றே அறியப்பட்டார். பயோனியர் என்றே மக்களால் அழைக்கப்பட்டார். வரலாற்று நாயகனாக மக்கள் மனங்களில் இன்றும் வலம் வருகிறார். அன்னாரின் புகழ் என்றும் மண்ணில் நிலைத்து நிற்கும். ஆம்! அவர், வரலாற்றில் முன்னோடியாக திகழ்கிறார். குமரி மக்களின் நெஞ்சில் நிறைந்து நிற்கிறார்.

7

# பயோனியர் திவானுக்கு எழுதிய கடிதம்

உரிமையாளர்கள்: குமாரசாமி மற்றும் சகோதரர்கள்
தந்தி முகவரி: டவ்வர் வியூ

பயோனியர் மோட்டார் சேவை, நாகர்கோயில், தென்இந்தியா.

மேதகு திருவிதாங்கூர் நாடு திவான் அவர்களுக்கு, திருவனந்தபுரம்.

திவான் அவர்கள் கவனத்திற்கு,

திருவனந்தபுரம் மற்றும் கன்னியாகுமரிக்கு இடையே அரசுப் பேருந்தினை இயக்கும் திட்டம் மேற்கொள்ள இருக்கும் இந் நேரத்தில் மேதகு திவான் அவர்களின் அனுதாபமான கவனத்திற்கு பயோனியர் பேருந்துச் சேவையின் வரலாற்றினைப் பணிவுடன் சமர்ப்பிகின்றேன்.

நான் மேன்மைதங்கிய திருவிதாங்கூர் மன்னரின் நாட்டில் பிறந்த ஒரு குடிமகன். நான் நாகர்கோயிலில் உள்ள சாலியர் அல்லது நெசவாளர் சமுதாயத்தைச் சார்ந்தவன். வறுமை காரணமாக எனக்கு எந்தவிதமான கல்வியும் கிடைக்கவில்லை. என்னுடைய வறுமைமிக்க குடும்பத்தை, மூன்று சகோதரர்களில் மூத்தவனான நான்தான் சிறுவயது முதல் கவனிக்க வேண்டியிருந்தது. முதலாவது என்னுடைய இனத் தொழிலை மிகச் சிறிய சம்பளத்தில் செய்துவந்தேன். பிறகு ஒரு கடையில் எடுபிடி வேலை செய்தேன். அதன்பின் ஒரு பேருந்து கட்டமைப்பில் பணி செய்தேன். பதினைந் தாவது வயதில் கார் ஓட்ட கற்றுக்கொண்டேன். என்னுடைய நடைமுறை அனுபவத்தாலும் ஈடுபாட்டாலும் மோட்டார் தொழிலில்

நல்ல திறனைப் பெற முடிந்தது. மோட்டார் ஓட்டுநராக என் வாழ்வைத் துவங்கினேன். மோட்டார் உரிமையாளர் ஆகும் ஆசை என்னை ஆட்கொண்டது. இந்த ஆசை என் மனதில் ஏற்பட்டு ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர் 1920இல் ஒரு பேருந்து உரிமையாளன் ஆனேன்.

அப்போது முன்னேற முடியாமல் பல பேருந்து உரிமையாளர்கள் தம் தொழிலுக்கு முழுக்குப் போட்டனர். மோட்டார் தொழில் அப்பொழுது இலாபகரமானதாக இல்லை. நாற்பதுக்கும் மேலானோர் விரும்பத்தகாத போட்டிகளினால் இழப்பை சந்தித்தனர்.

நான் மோட்டார் தொழிலில் புகுந்தபோது விரும்பத்தகாத போட்டிகளினால் இழப்பு ஏற்பட்டு, போட்டி மென்மேலும் அதிகமாக இருந்தபோதிலும் தனிக்கவனம் செலுத்துவதன் மூலம் அதனை இலாபம் தருவதாக மாற்றலாம் என்று கருதினேன். காலம் போகப்போக ஈடுபாட்டினை மிகைப்படுத்தி ஒன்றுக்கு மேற்பட்ட பேருந்துகளை வாங்கினேன். என்னுடைய தந்தையாரின் ஒத்துழைப்போடு ‘எ’ மற்றும் ‘பி’ உரிமங்களோடு மேல்நாட்டு மதுபானங்களை விற்கும்போது மளிகைக் கடையினை நடத்திவந்த என் தம்பியர் இருவரையும் அதை விட்டுக்கொண்டு மோட்டார் தொழிலில் ஈடுபடும்படி அழைத்தேன்.

என் தம்பியரும் நானும் தந்தையாரின் நிர்வாக உதவியோடு எங்கள் நேரத்தையெல்லாம் மோட்டார் தொழிலேயே செலுத்தினோம். நாங்கள் தேடிய இலாபம் எல்லாம் தொழிலேயே மீண்டும் செலவழிக்கப்பட்டது. நாங்கள், ஆடம்பர வாழ்வு வாழ்ந்ததே இல்லை. பங்களாக்களையும் மாளிகைகளையும் வாங்கவில்லை. வரலாற்றில் இடம்பெற்ற இழப்புகளுக்கு இடையே, பலத்த போட்டிக்கு மத்தியில், நன்கு வளரும் தொழிலை நடத்துவதே எங்கள் ஆசையாக இருந்தது. தாமே ஓட்டிய ஓட்டுநர்களின் பேருந்துகள் சில, மலபார் வணிகக் கழக வாரியத்தின் இரு பேருந்துகளோடு போட்டிபோட்டுக் கொண்டிருந்தபோது, ஏறக்குறைய எல்லா பேருந்து நிறுவனங்களும் நிர்வாகச் சீர்கேட்டாலும் மறைமுக கண்காணிப்பாலும் இடத்தைக் காலி செய்துவிட்டன. நாகர்கோயிலிருந்து திருவனந்தபுரம் செல்ல

பேருந்துக் கட்டணம் ரூ 1.80/– (ரூ. 1.50/–); பெட்ரோல் விலை காலணாவுக்கு (ஏறக்குறைய 5 லிட்டர்) 10 அணா (62 காசுகள்); சுங்கவரி ஒரு நாளுக்கு ரூபாய் 1/–; நாட்டில் செழிப்பு மிகுந்து மக்கள் பயணத்தை விரும்பி பேருந்தை விரும்பும் மனநிலையை வளர்த்துக் கொண்டிருந்த நேரம்.

நான் மோட்டார் தொழிலில் ஆழ்ந்த விரிவாக்கத்திற்கு திட்டமிட்டேன். செழிப்பாக வாழும் மக்களுக்கு வழக்கத்தில் இருந்துவந்த அதிகமான கட்டணத்தை ஏற்புடையதாக குறைத்து நல்ல வசதிகளோடு உள்ள பேருந்துகளை சாலைகளில் இயக்கினால் எதிர்காலத்தில் நம்பிக்கையைப் பெறலாம் என நான் கணக்கிட்டேன். இந்த கணக்கில் துணிவாக இறங்கினோம். முன்னேற்றத்தை மனதில் நிறுத்தி நல்ல டயர் பொருத்திய வண்டிகளை இயக்கியதோடு எல்லோருக்கும் இயலும்படி கட்டணத்தைக் குறைத்தேன். கிராமங்களுக்கு பேருந்து வசதி இல்லாததால் தென்திருவிதாங்கூரின் எல்லா கிராமங்களுக்கும் கிளை தடங்களை துவக்கினேன்.

ஆனால், எல்லா தடங்களிலும் போட்டி இருந்தது. போட்டியைத் தவிர்க்க பிற பேருந்து உரிமையாளர்களோடு ஒப்பந்தங்கள் செய்யப்பட்டன. எதிர்காலப் போட்டியைத் தவிர்க்க எதிரிகளின் பேருந்துகளை வாங்க வேண்டியதும் இருந்தது. அனால், போட்டிகளை தவிர்க்க இயலவில்லை. பிற போட்டியாளர்கள் வந்து கொண்டிருந்தனர். கட்டணப் போரும் நடந்துகொண்டே இருந்தது. என்னுடைய பொறுப்பு மிகுந்தது. போட்டியை எதிர்கொள்வதற்கு மேலும்மேலும் பணம் கடன் வாங்கி முடக்க வேண்டியிருந்தது.

1930இல் திருவிதாங்கூர் வங்கி விசாரணைக் குழுவின் அறிக்கையைக் கீழே தருகிறேன்:

“தொழில் தனிமனிதன் அடிப்படையிலேயே அமைந்துள்ளது. பேருந்து உரிமையாளர்களுக்கு இடையே அமைப்புமுறை இல்லை. கட்டணத்தைக் குறைத்துக்கொண்டே போகும் அளவிற்கு போட்டி நிலவுகிறது. இந்தியாவில் எந்த பகுதியிலும் வழக்கத்திலுள்ள மிகக்

குறைந்த கட்டணம் ஒருவருக்கு ஒரு மைல் தூரத்துக்கு 3 பைசா (கால் அணா; இன்றைய காசு 1.5) ஆகும்.''

''துறையின் முன்னோடிகள் சிக்கன நடவடிக்கை மற்றும் தொழில் விற்பன்னத்தால் சாதாரண அளவுக்கு முன்னெச்சரிக்கையின்றி வருமானத்தை விரயம் செய்வதே இயல்பாக இருக்கிறது. இவர்கள் புதிய டயர்கள் மற்றும் உதரிப் பாகங்களை வாங்கி மீண்டும் மீண்டும் கடன்படுகின்றனர். சில வழித்தடங்களில் ஏற்பட்டுள்ள அதிகக் கூட்டமே மந்த நிலைக்குக் காரணம்.''

''தற்கால நிலையை மாற்றுவதற்கு இரண்டு ஆலோசனைகள் எங்களிடம் வந்துள்ளன: ஒன்று, தேவைக்கு தகுந்தபடி தடத்தில் பேருந்துகளை குறைத்துவிடுவது. இரண்டு, பொதுமக்கள் பிரதிநிதி, காவல்துறை மற்றும் பொதுப்பணித்துறை கலந்துகொள்ளும் அரசு அலுவலர்கள் மற்றும் பேருந்து உரிமையாளர் கொண்ட வாரியத்தினை அமைத்தல்.''

அமெரிக்காவில் 1929இல் துவங்கி உலகமெங்கும் பரவிய பொருளாதார மந்தநிலை திருவிதாங்கூரில் உணரப்படுவதற்கு முன்பாக இந்த அறிக்கை வெளியிடப்பட்டது. உள்ளூர் உற்பத்திப் பொருட்களின் விலையில் 40 முதல் 50 விழுக்காடு வர சரிவு ஏற்பட்டது. ஆனால் பேருந்துக் கட்டணத்தை குறைப்பதிலோ அல்லது புதிய புதிய பேருந்து உரிமையாளர்கள் தோன்றுவதிலோ எந்தவித குறைவும் ஏற்படவில்லை. இந்தப் போட்டியை சமாளிக்கவும், என்னுடைய தொழிலை நிரந்தரமாக்கவும் பெரியளவில் கடன்வாங்கி வேலை செய்ய வேண்டியதாக இருந்தது.

கடன்வாங்கிய முதலுக்கு வட்டி கொடுத்துவிட்டு இலாபம் ஈட்டுவதற்கும், தீவிரமான போட்டியை எதிர்கொள்வதற்கும் நான் தத்தளித்துக் கொண்டிருந்த நேரத்தில் தொழில் போட்டியாளர்கள் செல்வாக்கு மற்றும் பணத்தால் அரசியல் போர்வையில் அலைவோரின் துணையோடு என் தொழிலை பல திசைகளிலிருந்து தாக்குவதற்கு துவங்கினர். மேதகு திவான் பதவி ஏற்பதற்கு முன், சில ஆண்டுகளாக நடைபெற்ற சட்டசபை நடவடிக்கைகளைப் பார்த்தால் இதன் உண்மை தெரியும்.

ஆங்கிலேயர்கள் நேரடியாக ஆண்டுவந்த பகுதிகளில் வயது முதிர்ந்த பேருந்துகளை ஒதுக்கித் தள்ளும் முறை இருந்தது. திருவிதாங்கூரிலும் கடைபிடிக்கும் நோக்கம் ஏற்பட்டவுடனே, பழையப் பேருந்துகளுக்குப் பதிலாக புதிய பேருந்துகளை வாங்கி இயக்கினேன். இந்த கண்ணோட்டத்தோடு நான் இன்னும் பல புதிய பேருந்துகளை வாங்க ஏற்பாடு செய்தேன். இவற்றை வாங்கி முறைப்படி பதிவு செய்து உரிமத்தோடு நாகர்கோயில் இருந்து திருவனந்தபுரம் வழித்தடத்தில் ஓடச் செய்தேன். என்னுடைய போட்டியாளர்கள் எல்லோரும் சேர்ந்துகொண்டு செயல்பட்டதால் நானும் அவர்களும் பெரும் இழப்பிற்கு ஆளாகினோம்.

ஏறக்குறைய ஒன்பது மாதங்களுக்கு முன்னர்தான் எனக்கும் போட்டியாளர்களுக்கும் இடையே ஒரு சமாதானம் ஏற்பட்டது. இதற்காக நான் அதிகமான தியாகம் செய்ய வேண்டியதாக இருந்தாலும் நான் மகிழ்ச்சியோடு குறிப்பிடும் அளவுக்கு நல்ல இலாபத்தை என்னால் ஈட்ட முடிந்தது. சின்டிகேட் மோட்டார் சேவை என்ற அமைப்பினை ஏற்படுத்திய போட்டியாளர்களுக்கும் எனக்கும் இடையே ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது.

நான் இந்த சிறந்த ஏற்பாடுகளை எல்லாம் செய்து முடித்த நிலையில் என்னுடைய தியாகத்திற்கும் போடப்பட்ட முதலுக்கும் ஏற்றபடி வருவாய் வரத் துவங்கிய நேரத்தில் அரசு போக்குவரத்து திட்டம் வடிவமைக்கப்பட்டது. அது என் மோட்டார் சேவை தொழிலையே துன்புறுத்துகிறது. இது பேரிடியாக விழுகிறது. என்னுடைய மோட்டார் தொழில் ஏற்கனவே இருந்த நிலையை மாற்றி, வெற்றிபோடும் நேரத்தில் அரசின் திட்டம் துவங்கப்படுகிறது.

மிகக் குறுகிய காலத்தில் அரசு தன் திட்டங்களை நிறைவேற்றி இருப்பதால் எனக்குரிய இழப்பீட்டை ஈடு செய்துவிட்டால் அல்லது அதற்குரிய ஏற்பாடுகளைத் செய்துவிட்டால் நான் என்னுடைய முழு மோட்டார் தொழிலையும் அரசின் பொறுப்பிலேயே கொடுத்துவிட தயாராக இருக்கிறேன். அரசு பரிந்துரைத்துள்ள டீசல் மோட்டார் சேவையை, எனக்கு நேரமும் வழிமுறைகளும் கொடுப்பதாக இருந்தால் நடைமுறைப்படுத்தித் தர தயாராக இருக்கிறேன்.

நாகர்கோயில் – கன்னியாகுமரி வழித்தடத்தில் எந்த திட்டத்தை நிறைவேற்ற அரசு விரும்பினாலும் என்னுடைய தனிப்பட்ட மற்றும் தொழில் ரீதியான சேவைகளை ஒப்புக்கொள்ள விரும்பியிருந்தால் மட்டும், நானே அதனை என்னுடைய நீண்டகால அனுபவத்தின் மூலம் செய்து முடித்திருக்க முடியும். இதில் எதுவுமே நடக்கவில்லை.

என்னுடைய தொழிலின் ஆணிவேரை அசைக்கவே அரசு முன்வருகின்றது. 45 பேருந்துகள் ஓடுகின்ற கிளைத் தடங்களையும் திருவனந்தபுரம் நகர சேவையையும் என்னிடம் ஒதுக்கிவிட்டு திருவனந்தபுரம் கன்னியாகுமரி நெடுஞ்சாலையை எடுத்துக் கொள்ளவே அரசு விரும்புகிறது. கிளைத் தடங்களை நடத்துவது மொத்தமான இழப்பையே தரும் என்பதை உண்மையான அனுபவத்தால் நான் அறிந்ததே. என்னுடைய நிறுவனங்கள் முழுமையாக அப்படியே இருக்க வேண்டும். நாகர்கோயிலில் உள்ள தலைமையகம் பெருமளவு இழப்பு ஏற்படாமல் மாற்ற இயலாதது. அரசு கையகப்படுத்த நினைக்கும் நெடுஞ்சாலைத் தடத்தில் வரும் இலாபம், இந்த ஏற்பாட்டினால் அரசுக்கு சென்றுவிடுகிறது. கிளைத் தடங்களை மட்டும் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்படுவதால் இழப்பு முழுவதுமே என்மீது விழும். உண்மையைச் சொல்லப் போனால் நெடுஞ்சாலைத் தடத்துக்கு ஓட்டம் சேர்க்க என்னால் துவங்கப்பட்டதுதான் கிளை வழித்தடங்கள்.

ஒன்று, திருவனந்தபுரம் – கன்னியாகுமரி நெடுஞ்சாலை வழித்தடம். இரண்டு, கிளைத் தடங்கள் அல்லது ஊட்டுத் தடங்கள் மற்றும் மூன்று, திருவனந்தபுரம் நகர சேவை

இவை மூன்றையும் அரசு எடுத்துக்கொள்வதே முறையும் நீதியும் ஆகும்.

என்னுடைய மோட்டார் தொழிலில் முன்னேற்றங்கள் ஏற்பட்ட பிறகு சில காலத்திற்கு முன்னர் நூற்றுக்கு அதிகமான பேருந்துகளை பழுதுபார்க்கும் ஏற்பாடுகளை உடைய ஒரு பட்டறை அடிப்படைத் தேவையென நான் நினைத்தேன். என்னுடைய இயந்திர கம்மியர் அனைவரும் திருவிதாங்கூரை சார்ந்தவர்கள். பட்டறைக்குரிய

அத்தியாவசிய கருவிகள் எல்லாமே அண்மைக் காலத்தில் உருவாக்கப்பட்டவை. இவற்றையெல்லாம் சேகரிப்பதற்காக நான் பலமுறை சென்னை, பம்பாய் மற்றும் கல்கத்தா நகரங்களுக்கு சென்று திரும்பினேன். அங்கு கிடைப்பவற்றில் நல்லதை எல்லாம் நான் திருப்தியடைந்த பின்னரே வாங்கினேன்.

பட்டறை இருக்கும் இடத்தின் அருகிலேயே பேருந்துகள் ஓடாத நேரத்தில் நிறுத்துமிடத்தையும் அமைத்துள்ளேன். என் பேருந்துகளை ஓய்வு நேரத்தில் நிறுத்துமிடம் நூறு பேருந்துகளுக்கு மேல் நிறுத்தத்தக்கது. பேருந்துகளுக்கு பாதுகாப்பும் தரப் பட்டுள்ளது. மோட்டார் தொழிலில் தொடர்புடைய ஐரோப்பிய மற்றும் அமெரிக்கப் பெருமக்கள் என் தொழிலகத்தையும் பேருந்துகள் நிறுத்துமிடத்தையும் வந்து பார்த்துவிட்டு, “இதைப்போல திட்டமிட்டு கட்டப்பட்ட நிறுவனத்தை இந்தியாவில் வேறெங்கும் காண முடியவில்லை” என்று தெரிவித்தனர். இந்த உண்மையை எப்பொழுதும் நிருபிக்க முடியும்.

என்னிடமிருந்து திருவனந்தபுரம் – கன்னியாகுமரி வழித்தடத்தை எடுத்துவிட்டால் கிளை தடங்களுக்கு மட்டும் நாகர்கோயில் மத்தியில் அமைக்கப்பட்டுள்ள பட்டறையும் பேருந்துகள் நிறுத்துமிடமும் மிகப் பெரிய பொருள் இழப்பை ஏற்படுத்துவதாக இருக்கும். அந்தச் சூழ்நிலையில் பட்டறையை நடத்துவது என்னை அழிப்பதாக அமையும். அரசின் பேருந்துகளை பராமரிக்க ஒரு பெரிய பட்டறையையும் பேருந்துகளை நிறுத்தும் இடத்தையும் சேர்த்து அரசே ஏற்றெடுக்கலாம் என்பதை தெரிவிக்க என்னை அனுமதிக்க வேண்டும். இச்செயல் அரசுக்கு அதிகமான நன்மை பயப்பதாக அமையும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். என்னுடைய வாழ்க்கையின் நல்ல பகுதியை நான் இந்த மோட்டார் தொழிலிலேயே செலவு செய்துள்ளேன். தென்இந்தியா முழுவதும் இத்துறையில் திறமையானவன் என்ற பெயரை நான் எடுத்துள்ளேன். தென்இந்தியாவின் எந்தப் பகுதியிலும் திறமையானவன் என்ற அளவில் என் சேவைக்கு வரவேற்பு உண்டு. அகில திருவிதாங்கூர் பேருந்து ஓட்டுநர் வேலை நிறுத்ததின்போது

தனிமனித ஆபத்தையும் பார்க்காமல் நானும் என் தம்பிகளும் வண்டிகளை வெளியே ஓட்டி வந்தபோது காவல்துறை ஆணையாளரும் எங்களை வெகுவாகவே பாராட்டினார்கள்.

என்னுடைய பயோனியர் பேருந்துச் சேவை இந்தியா முழுவதும் நன்றாகச் செயல்படும் நிறுவனம் என பெயர் பெற்றுள்ளது. குறிப்பிட்ட பயணிகள், திருயாத்திரைக்காரர்கள் மற்றும் கல்வி நிறுவனத்தார்கள் ஆகியோர் பயோனியர் பேருந்து சேவையின் நவீன மேலாண்மை, பணிவு மற்றும் திறமையான சேவைகளுக்காக நற்சான்றிழ்களை வழங்கியுள்ளார்கள்.

பயோனியர் பேருந்து சேவையில் அதனுடைய நற்பெயரைப் பாதிக்கும் அளவிற்கு அரசின் போக்குவரத்துத்துறை நினைக்கும் அளவிற்கு குறைகளோ, பயணம் செய்யும் மக்கள் குறை சொன்னதாகவோ அல்லது குறிப்பிடத்தகுந்த விபத்துகளோ இருந்ததில்லை.

பயோனியர் பேருந்துச் சேவையில் வேலை நிறுத்தமே நடந்ததில்லை. இது பணியாளர்களுக்கும் உரிமையாளருக்கும் இடையே நிலவிய நட்பின் இலக்கணத்தை நிருபிப்பதாகும். சாதி இன வேறுபாடு இல்லாமல் எல்லா சமுதாயங்களிலிருந்தும் என் தொழிலாளர்கள் தேர்ந்தேடுக்கப்பட்டனர். ஒவ்வொரு மாதமும் நான் ரூ 18,000/– சம்பளமாக என் தொழிலாளர்களுக்கு வழங்கி வருகின்றேன். 800 குடும்பங்களை தாங்கும் 800 தொழிலாளர்கள் என்னிடம் பணி புரிகின்றனர். என்னுடைய வரம்பிற்குட்பட்ட அளவில் தென் திரு விதாங்கூரிலுள்ள வேலையின்மையை நான் போக்கி இருக்கிறேன்.

பயோனியர் பேருந்து சேவையிலும் பட்டறையிலும் வேலை பார்க்கும் திருவிதாங்கூர் தொழிலாளர்கள் என்னிடம் பல்துறை அனுபவத்தைப் பெற்றுவிட்டு பரிந்துரையோடு திருவிதாங்கூரின் உள்ளேயும் வெளியேயும் தென்இந்தியா முழுவதும் பணியாற்றி வருகிறார்கள்.

கிளைத் தடங்களில் போதிய வருமானம் இல்லாததால் அதனை அதிகரிக்க நான் ஒரு திரையரங்கை ஆரம்பித்தேன். நாகர்கோயில்

நகர சபையில் ஏற்பட்டுள்ள அரசியல் கட்சி நிலைகள், பேருந்துப் போட்டிகளின் காரணமாக ஏற்பட்டு, அது குறையாமலே இருப்பதால் திரையரங்குகளையும் நகரசபை நிர்வாகத்தின்கீழ் கொண்டுவரப் போவதாக நான் அறிகிறேன். எனக்கு ஒரளவு இழப்பீடு தருவதாக இருந்தால் திரையரங்கையும் நகரசபை அல்லது அரசிடம் ஒப்படைக்க நான் தயார்தான்.

இதேநிலை நான் நடத்திவரும் நாகர்கோயில் மின்சார விநியோகக் குழுமத்துக்கும் பொருந்தும். மக்கள் பயன்படுத்தும் சேவைகள் எல்லாம் தேசியமயம் ஆக்கப்படுவதை நான் ஏற்றுக்கொள்வதோடு, தானே எல்லாவற்றையும் நடத்துகிறேன் என மனமாச்சரியமும் இருப்பதால் அரசு மின்சார விநியோகத்தை தாமே எடுத்து நடத்தலாம் என விரும்பினால், தகுந்த இழப்பீடு தந்தால் நான் மாற்றம் செய்ய எப்போதுமே தயாராக இருக்கிறேன்.

கடன் வாங்கப்பட்ட முதலீட்டில் அதிக துன்பப்பட்டு நான் தொழில்களை கட்டி எழுப்பியுள்ளேன். பல இடங்களிலிருந்து வரும் அடிப்படையற்ற பொய் செய்திகள் என்னுடைய மதிப்பை இழக்கச் செய்கின்றன.

முடிவாக, நான் திருவிதாங்கூர் மன்னரின் குடிமகன். நாகர் கோயிலில் தமிழ்ச் சாலியர் சமுதாயத்தில் எளியவனாகப் பிறந்தவன். என்னுடைய குழந்தையையும் தம்பிமாரையும் உட்படுத்தியுள்ள மோட்டார் தொழில் என்னால் மிகுந்த சிரமத்தோடு துவங்கப்பட்டது. மிகுந்த செல்வாக்காலும் செல்வத்தோடும் ஏற்பாடு செய்யப் பட்டுள்ள நிலையில் கசப்பானது மட்டுமின்றி கொடூரமான போட்டியை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. ஆழ்ந்த அடக்கத் தோடும் பொறுமையோடும் பின்வாங்காத அன்போடும் எங்களுடைய உடல், பொருள், ஆவி எல்லாமே அர்ப்பணம் செய்யப்பட்டிருப்பதால்தான் போட்டியை சமாளித்து நிற்க முடிகிறது.

மேதகு திவான் அவர்கள் பெறுப்பேற்பதற்கு முன்னர் சட்ட மேல்சபையின் நடவடிக்கைகளைப் பார்த்தால் இப்போட்டி எவ்வளவு கசப்பானது என்பது மட்டுமின்றி எவ்வளவு பழிவாங்கும்

தன்மையுடையது என்பதும் தெரியவரும். சட்ட மேலவைப் பேச்சுகள், பயோனியர் பேருந்துச் சேவை ஒரு தனியார் நிறுவனம் என்பதை மறந்தே நடைபெற்றுள்ளது. அவர்கள் ஒரு மேல்நிலை கௌரவத்தில் இருக்கிறார்கள். பயணம் செய்யும் மக்கள் மற்றும் அரசு நிர்வாகத்தின் ஒத்துழைப்பு இல்லாமல் பேருந்து சேவையை நடத்தவே முடியாது. வெற்றிபெறுவது வேறு விடயம்.

என்னுடைய தொழில் போட்டியாளர்களிடம் ஒரு ஏற்பாடு செய்து ஒன்பது மாதங்களே ஆகின்றன. இப்போது இலாபம் வருகிறது. போட்டி இருக்கும்போது என்னை தொழில் ரீதியான எதிர்ப்போரின் அரசியல் ஆலோசனைகளை சமாளிப்பது என்னுடைய பொருள் நிலைக்கு அரிதாகவே உள்ளது. அரசியல்வாதிகள் என்னை அழிவின் விளிம்பிற்கு தள்ளிவிட்டார்கள். என்னுடைய மதிப்பு நிலைகுலைந்து விட்டது. இதுவரை என்னுடைய தொழில், கடன்வாங்கிய முதலீட்டிலேயே ஓடிக் கொண்டிருக்கிறது. என்னுடைய கடன்காரர்கள் மத்தியில் நான் நின்று கொண்டிருக்கிறேன். எனக்கு இழப்பீடு தரப்படும் என்ற மேதகு திவான் அவர்களின் அறிவிப்பு என்னை என் கடன்காரர்கள் மத்தியில் காப்பாற்றுகிறது.

மேதகு திவான் அவர்கள் எனக்கு இழப்பீடு தரப்படும் என்று குறிப்பிட்டிருப்பதை என்னுடைய அரசியல் எதிரிகள் சட்டப்பூர்வமான உரிமை என்று கொள்ளாமல் ஒரு மனமுவந்து அளிக்கும் பிச்சை என்று சொல்வதால் இழப்பீடு கிடைக்காது என்றே பிரச்சாரம் செய்கின்றனர். இழப்பீடு பற்றிய முடிவெடுத்து, அதனை எனக்கு அளிக்காமல் சாலையில் என்னுடைய பேருந்துகளுக்குப் பதில் புதிய அரசுப் பேருந்துகளை இயக்கினால் என்னுடைய கடன்காரர்கள் என்ன செய்வார்கள்? என்னுடைய தொழிலில் முடக்கியுள்ள முதல் என்னவாகும்? நான் என்ன செய்வது என்பதெல்லாம் எனக்குத் தெரியவில்லை. இதன் முடிவு என்னை எளிதாக தொழிலிலிருந்து விரட்டுவதாகவே இருக்கும். கடைசியில் நான் பிச்சை எடுக்க வேண்டியதுதான்.

இந்த சூழ்நிலையில் என்னுடைய உரிமைகளும் கோரிக்கைகளும் எப்படியிருந்தாலும் எனக்கு ஏற்ற இழப்பீடு தராமல் என்னுடைய பேருந்துகளுக்குப் பதில் அரசு பேருந்துகளை இயக்குமானால் இந்த அரசின் குடிமகனும் இந்த நாட்டின் தொழில் முனைவோரும் ஆகிய என்னுடைய நிலை தரம்தாழ்ந்து போய்விடும்.

வாங்கியப் பொருட்கள், இயந்திரங்கள் மற்றும் மோட்டார் வண்டிகளுக்கு ரூ. 2,75,000/–, தொழில் இழப்பிற்காக ரூ. 4,18,000/– ஆகிய தொகைகளை அரசுப் பேருந்துகளைத் திருவனந்தபுரம் – கன்னியாகுமரி தடத்தில் இயக்குவதற்காக தர வேண்டுமென நான் முறையீடு செய்கிறேன்.

நாகர்கோயில்,
21 சனவரி 1938
8 மகரம்1113

மேதகு திவான் அவர்களுடைய
கீழ்படிதலிலுள்ள
குமாரசாமி

8

## பயோனியரின் உயில் பத்திரம்

3–8–86–88–38/1960

ஆயிரத்தி தொள்ளாயிரத்தி அறுபதாவது வருடம் செப்டம்பர் மாதம் இருபத்தி நான்காம் தேதி, அகத்தீசுவரம் வட்டம், வெட்டூர்ணிமடம் அருகிலுள்ள நாகம்மாள் பவனில் சாச்தா அவர்கள் மகன் விவசாயம் அறுபத்தி மூன்று வயதான குமாரசுவாமி எழுதிவைத்த உயில் பத்திரம் என்னவென்றால்,

எனது மனைவி நாகம்மாள் காலஞ்சென்று விட்டார். அப்பால் நான் கல்யாணம் யாதொன்றும் செய்யவில்லை. எனக்கு நாகம்மாளிடத்தில் பிறந்த பகவதியம்மாள், கிருசுணம்மாள், தங்கம்மாள், இராசம்மாள் ஆகிய நான்கு மக்கள் இருக்கிறார்கள். அவர்கள் நால்வரும் கல்யாணமாகி கணவருடன் வாழ்ந்து வருகிறார்கள்.

என் தாயார் சிவகாமி அம்மாள் என்னோடு வாழ்ந்து வருகிறார். தாயாரின் பேரில் நான் ஏராளமான சொத்துகளைச் சேர்த்து, அவைகள் தாயாரின் உடமையிலும் அனுபவத்திலும் இருக்கிறது. எனக்கு சென்னை, திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலி பாளையங்கோட்டை பழவூர் கிராமம், கன்னியாகுமரி மாவட்டத்தில் வடசேரி, நாகர்கோயில், கன்னியாகுமரி, தெரிசனங்கோப்பு, அருமநல்லூர், குளச்சல், இரணியல், தக்கலை, நல்லூர், தோவாளை இந்த கிராமங்கள் உட்பட்ட இடங்களில் விவசாயச் சொத்துகளும் பாலக்குளம் பண்ணை நிறுவனமும், நாகம்மாள் ஆலை நிறுவனமும், பயோனியர் பணியாளர் நிறுவனத்திலும், பயோனியர் இயந்திரங்கள் என்ற பங்கு வியாபாரத்தில் பங்குகளும் உண்டு. நாகர்கோயில், திருநெல்வேலி ஆகிய இடங்களில் பெட்ரோல் விற்பனைப் பங்குகளும் உண்டு.

சென்னை மாநில அரசு கடன் பத்திரத்திலும், தேசிய சேமிப்பு சான்றிதழிலும் நான் தொகைகள் போட்டிருக்கிறேன். வேறு

சிலரிடமிருந்தும் எனக்கு தொகைகள் வர வேண்டியதும் உண்டு. எனது மக்களான மேல்சொன்ன நால்வரும் கணக்குப்படி எனக்குத் தரவேண்டிய தொகைகளும் உண்டு. அதை அவரவர் பேரில் கணக்கு எழுதியிருக்கிறேன். நான் செலுத்த வேண்டிய வருமான வரி முதலான தொகைகளும் உண்டு. என்பேரில் காணப்பட்ட எல்லா விவசாய செங்கம சொத்துகளும் என்னுடைய வகையாகும். இவ்விதமான சொத்துகளை பொறுத்து ஒரு உயில் எழுதி வைக்க வேண்டுமென்று நினைத்து இதுவரையும் நடக்காமல் போய்விட்டது.

இப்போது எனக்கு உதரநோய் பிடிபட்டிருக்கிறது. அது, அறுவை சிகிட்சையால் குணமாகும் என்று இந்தவாரம் வந்து என்னைப் பார்வையிட்ட சென்னை மருத்துவர்களான சதாசிவன் அவர்களும், வேணுகோபாலன் அவர்களும் அபிப்பிராயம் சொல்லியிருப்பதால் நான் இந்த அறுவை சிகிட்சைக்கு சென்னை போக உறுதி கொண்டிருக்கிறேன். ஆகவே, என் சொத்துகளைப் பொறுத்து இந்த உயில் பத்திரத்தினால் என்னுடைய மக்கள் ஒவ்வொருவரிடமும் அவகாசம் கொடுத்து எழுதி வைக்க வேண்டுமென்ற எண்ணத்தை இதனால் முடிவு செய்திருக்கிறேன்.

பயோனியர் மோட்டார் பங்கு வியாபாரத்தில் எனது மூத்த மகளான பகவதியம்மாளுக்கு ஓகரி இல்லாததால் மேற்படி வியாபரத்திலுள்ள எனது ஓகரியை மேற்படி பகவதியம்மாளுக்கு தனியாக விலைபடுத்தி நான் கொடுத்திருக்கிறேன். மக்கள் நால்வரும் எனக்குத் தர வேண்டியதான கணக்கில் காணக்கூடிய தொகை பூராவும் அவர்களுக்கு நான் விட்டுக் கொடுத்திருக்கிறேன். ஆதலால் அந்த கடன் தீர்ந்து போய்விடும். வேறுள்ள என்னுடைய சகல விவசாய செங்கம சொத்துகளையும் எனது மக்களான மேற்படி பகவதியம்மாள், கிருசுணம்மாள், தங்கம்மாள், இராசம்மாள் என்று நான்கு மக்களுக்குமாக கொடுத்திருக்கிறேன். ஒவ்வொரு வருக்கும் நாளொன்று வீதம் அவகாசம் கிடைப்பதாகும்.

என் ஆயுளுக்கு நான் கொடுத்து தீர்க்க வேண்டியதாக வருமான வரி முதலான கடன்கள் ஏதாவது இருக்குமானால் அதை மேல்சொன்ன மக்கள் நால்வரும் சமமாக கொடுத்து தீர்க்க

வேண்டியது. இதில் குறிப்பிடாமல் ஏதாவது சொத்துகள் விட்டுப்போனதாக காணப்படும் சமயம் அவைகளும், நான் மேலால் சேர்த்ததும் எனக்கு அவகாசமுமான எல்லா சொத்துகளும் என் நான்கு மக்களுக்கும் சமபாகமாக உரிமைபடுத்தி இருக்கிறேன்.

தெரிசனங்கோப்பு கிராமம், சர்வே **2693**ஆம், **2694**ஆம் எண் சொத்துகளை பொறுத்தளவில், நான் நாகர்கோயில் சார்புநிலை நீதிமன்றம் **1958**ஆம் வருடம், அசல் வழக்கு **30**ஆம் எண்ணாக விசாரிக்கப்பட்டு அவகாசம் நிறுவி உத்தரவு பெற்றிருக்கிறேன். அந்த உத்தரவுக்கு மேல் சென்னை மாநில அரசு மேல்முறையீடு தாக்கல் செய்திருப்பதால் அந்த வழக்கை என்னுடைய நான்கு மக்களும் சமதலையுடன் நடத்தி உரிமைபடுத்திக்கொள்ள வேண்டியது. என்னுடைய நான்கு மக்களுக்குள் ஏதாவது விடயத்தில் அபிப்பிராய வித்தியாசம் வருகிறது என்றால் அவர்கள் என்னுடைய நண்பர்களான வழக்கறிஞர் ஆர். இராமலிங்க அய்யர் அவர்களிடமும், கிருசுணசுவாமி அய்யங்கார் அவர்களிடமும் கலந்து அவர்களுடைய ஆலோசனைப்படி நடந்துகொள்ள வேண்டியது. அவ்விதம் நடந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

இந்த உயில் பத்திரத்தில் கண்டிருக்கிற எல்லா காரியங்களும் என்னுடைய ஆயுளுக்கு பின்னாலே மெய்ப்பித்தல் வரும். என் ஆயுள் காலத்தில் எனக்குள்ள சர்வ சுதந்திர உரிமைக்கு எவ்வித குறையும் ஏற்படாது. ஆதலால், இந்த உயில் பத்திரம் முழுவதையும் எனக்காக வேண்டி மாற்றம் செய்யவும், வேறு ஏதேனும் காரணங்களை எழுதவும் எனக்கு பூரண உரிமையுண்டு. எனது மனப்பூர்வமான எண்ணம் கொண்டும், நல்ல நோக்கம் கொண்டும் இந்த உயில் பத்திரத்தை எழுதி வைத்திருக்கிறேன்.

இப்படிக்கு சம்மதித்து எழுதிவைத்த சாத்தா அவர்களின் மகன்
குமாரசாமி.

# 9

# பயோனியர் குறித்த புகைப்படங்கள்



பயோனியர் குமாரசாமி



பயோனியரின்
பெற்றோர்
சாத்தா மற்றும்
சிவகாமி



மூன்று சகோதரர்கள்
நெல்லையப்பன், குமாரசாமி மற்றும் நாகமணி



இராம கிருசுணா
குழந்தையுடன்
நாகம்மாள்



பயோனியர் பேருந்துகள்



பயோனியர் **1917**இல் இயக்கிய முதல் பேருந்து



பயோனியர் பேருந்து நிலையம்



திருவனந்தபுரம் நகரத்தில் பயோனியர் பேருந்துசேவை
துவங்கப்பட்டபோது...



பயோனியரின் மருமகள்கள் மற்றும் பேரக் குழந்தைகள்



பயோனியர் திரையரங்கம்



பயோனியர் திரையரங்கில்
பயோனியருடன் நடிகர் திலகம் சிவாசி கணேசன்



பயோனியர் பவனில்
குழந்தை நட்சத்திரம் கமலகாசன் விருந்து உண்ணும் காட்சி



**1931**இல் விதவை திருமணத்தை பயோனியர் முன்னின்று நடத்தி வைத்தபோது உடன் இருப்பவர் பெரியார் ஈ.வெ. இராமசாமி




மின்விசை இல்லத்திற்கு அடிக்கல் நாட்டுவிழா
திருவிதாங்கூர் திவான் தி. ஆசுதின், பயோனியர், அலுவலர்கள் மற்றும் நண்பர்கள்



மின்விசை இல்லம் 1934



நாகர்கோயிலில் மின்வாரிய துவக்கவிழாவில் திருவிதாங்கூர் திவான் கபிபுல்லா, நெல்லையப்பன், பயோனியர் மற்றும் ஆங்கிலேய தொழில்நுட்ப வல்லுநர்கள்



**1942**இல் ஆரம்பிக்கப்பட்ட தொழிற்பயிற்சி நிலையம் முதல்வராக பயோனியர் மற்றும் துணை முதல்வராக நெல்லையப்பன்



பேபி இராமகிருசுணா பவன்




நாகம்மாள் ஆலை



நாகம்மாள் ஆலை நிகழ்வில்
காமராசர் மற்றும் நேசமணி



அமெரிக்காவின் புகழ்பெற்ற எரியும் கல் (Fire Stone)
நிறுவனத் தலைவர் எ.டி. வென்சல் மற்றும் அவரது மனைவி
தொழிற்கூடத்தில் பயோனியரை சந்தித்தபோது



பயோனியருடன் திருவிதாங்கூர் திவான் சி.பி இராமசாமி அய்யர்



ஆகத்து **1960**இல் பயோனியரின் உடல்நிலை குறித்து
விசாரிக்கிறார் சி.பி. இராமசாமி அய்யர்




பயோனியர் இறுதி ஊர்வலத்தில் பயன்படுத்திய வாகனம்



பயோனியரின் சாம்பலை சுமந்துகொண்டு நிற்கும் வாகனம்



நாகம்மாள் பவனிலிருந்து கன்னியாகுமரி நோக்கி
பயணித்த ஊர்வலம்



பயோனியரின் திருவுருப்படத்தை காமராசர் திறந்துவைத்தார்
அருகில் அமர்ந்திருப்பவர் குமரி மாவட்ட ஆட்சித்தலைவர்
அம்பா சங்கர்



பயோனியர் குமாரசாமி நினைவு விடுதி திறப்பு விழாவில்
முத்தப்பா, கே. பத்மநாபன், நாகமணி, என். சுப்பிரமணியம்,
பயோனியர் என். முத்து மற்றும் லூர்தம்மாள் சைமன்



பயோனியருக்கு மரியாதை செலுத்தும் அவரது நண்பர் கமீம் முத்தப்பா மற்றும் உள்ளாட்சி மற்றும் மீன்வளத்துறை மந்திரி லூர்தம்மாள் சைமன்.

# 10

## பயோனியாரைப் பற்றி மிகச் சுருக்கமாக

1. 1897ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 12ஆம் தேதி குமாரசாமி பிறந்தார்.

2. 1904 முதல் 1908 வரை, அதாவது 4ஆம் வகுப்பு வரை ஆரம்பக்கல்வி பயின்றார்.

3. 1908 முதல் 1911 வரை நூல்கடை, மருந்துக்கடை மற்றும் மரக்கடை ஆகியவற்றில் கூலிவேலை செய்தார்.

4. 1911இல், அதாவது 14 வயதில் வேலை தேடி சென்னைக்குச் சென்றார்.

5. 1911 முதல் 1915 வரை சென்னை அடிசன் மோட்டார் நிறுவனத்தில் வேலை செய்தார். 17 வயதில் ஓட்டுநர் உரிமம் பெற்றார்.

6. 1915இல் நாகர்கோயில் திரும்பினார்.

7. 1915 முதல் 1917 வரை கோட்டாறு லெட்சுமி விலாச இயந்திர சேவைகள் நிறுவனத்தில் நாகர்கோயிலில் இருந்து திருவனந்தபுரம் செல்லும் வழித்தடத்தில் ஓட்டுநராக வேலை பார்த்தார்.

8. 1917ஆம் ஆண்டு தொடக்கத்தில் சேம்பியன் மோட்டார் சர்வீசு என்கிற பழைய பேருந்தை விலைக்கு வாங்கினார்.

9. 1917ஆம் ஆண்டு நடுவில் மதுபானக் கடை உரிமம் பெற்றார். அதன்நிமித்தமாக அவருடைய தந்தையின் கடையை மதுபானக் கடையாக மாற்றினார்.

10. 1917ஆம் ஆண்டு இறுதியில் அவருடைய பேருந்துகளின் எண்ணிக்கை 12ஆக உயர்ந்தது. அதற்கு, பயோனியர் மோட்டார் சேவை எனப் பெயர் வைத்தார்.

11. 1922ஆம் ஆண்டில், அதாவது 25 வயதில் நாகம்மாள் என்ற பெண்ணை பயோனியர் திருமணம் செய்தார். அதேநாளில் அவருடைய தம்பி நெல்லையப்பனுக்கும் அதே மேடையில் திருமணம் நடைபெற்றது.

12. 1929ஆம் ஆண்டு, அதாவது 32 வயதில் திருநெல்வேலி மற்றும் திருவனந்தபுரம் ஆகிய நகரங்களில் திரையரங்கினை வாடகைக்கு எடுத்தார். பின்னர் அவை மூடப்பட்டன.

13. 1930ஆம் ஆண்டு, அதாவது 33 வயதில் நாகர்கோயிலில் பயோனியர் பிக்சர் பேலசை கட்டி முடித்தார்.

14. 1930ஆம் ஆண்டு, அதாவது 34 வயதில் தன்னுடைய திரையரங்கிற்கு போட்டியாக செயல்பட்டு வந்த கோல்டன் சினிமா தியேட்டரை விலைக்கு வாங்கினார். ஒரு வருடத் திற்குப் பின்பாக அதனை விற்றுவிட்டார்.

15. 1932ஆம் ஆண்டு, அதாவது 35 வயதில் அஞ்சல் சேவையை துவங்கினார். நேரம் தவறாமை மற்றும் நம்பகத்தன்மை ஆகியவற்றிற்காக திருவிதாங்கூர் அரசு விருது வழங்கி சிறப்பித்தது.

16. 1934ஆம் ஆண்டு, அதாவது 37 வயதில் நாகர்கோயில் மின்சார விநியோக நிறுவனத்தைத் துவங்கினார். முதன் முதலாக நாகர்கோயில் நகரம் முழுவதும் மின் இணைப்பை பொருத்தினார். 1952இல் மின் விநியோகத்தை திருவிதாங்கூர் அரசு நாட்டுடமையாக்கியது.

17. 1935ஆம் ஆண்டு, அதாவது 38 வயதில் டிரையம்ப் சிண்டிகேட் லிமிடெட் உரிமையாளர்களின் போட்டியை தவிர்ப்பதற்காக பேருந்து கட்டண சேவை பயணத்திற்கு 75 பைசா என்றும், நாகர்கோயிலில் இருந்து திருவனந்தபுரம் செல்வதற்கு 1 ரூபாய் என்றும், ஒருநாள் பேருந்து வாடகை 21 ரூபாய் என்றும் குறைத்துவிட்டார்.

18. 1936ஆம் ஆண்டு, அதாவது 39 வயதில் பயோனியருக்கு சொந்தமாக இருநூறு பேருந்துகள் இருந்தன. பண்டிகை

நாட்களில் குமரி மாவட்டம் முழுவதும் பயோனியர் பேருந்து மட்டுமே ஓடியது.

19. 1936ஆம் ஆண்டு, அதாவது 39 வயதில் ஆட்களை பேருந்தில் அழைத்து வந்ததாகவும், அரசுக்கு விரோதமாக அரசியல் கூட்டம் நடத்தி திவானுக்கு எதிராக தீர்மானம் நிறைவேற்றிய தாகவும் பயோனியர் கைது செய்யப்பட்டு தக்கலை சிறையில் அடைக்கப்பட்டார். பயோனியர்மீது சாட்டப்பட்ட குற்றத்தில் உண்மைத்தன்மை இல்லையென கருதிய திருவிதாங்கூர் அரசானது அவரை பின்னர் விடுதலை செய்தது.

20. 1938ஆம் ஆண்டு, திருவிதாங்கூர் அரசு தனியார் பேருந்துகளை அரசுடைமை ஆக்கியது. இழப்பீடு கேட்டு பயோனியர் முன்வைத்த கோரிக்கை மனு நிராகரிக்கப்பட்டது. இதனால் பெரிய இழப்பை சந்திக்க நேர்ந்தது. அதே வேளையில் சென்னை மாநிலத்தின் கீழுள்ள திருநெல்வேலி மாவட்ட ஆட்சித் தலைவர் வி. இராமகிருசுணா என்பவர் நாகர்கோயிலில் இருந்து திருநெல்வேலி வழித்தடத்தில் பேருந்து ஓட்டுவதற்கான அனுமதியை பயோனியருக்கு வழங்கினார். மேலும், திருநெல்வேலியில் தென்இந்திய ரெயில்வேயின் வெளிமுகவருக்கான அனுமதியையும் வழங்கினார். அப்பொழுது நாகர்கோயிலில் ரெயில்வே வசதி கிடையாது.

21. 1942ஆம் ஆண்டு இரண்டாம் உலகப் போர் நடைபெற்றது. இதனால் எரிபொருள் தட்டுப்பாடு ஏற்பட்டது. அப்பொழுது கரிவாயுவை பயோனியர் உற்பத்தி செய்தார். அதற்கு பயோனியர் கரிவாயு உற்பத்தி பணிகள் லிமிடெட் என பெயர் சூட்டப்பட்டது. இது சென்னையில் இயங்கி வந்தது. பெட்ரோலுக்குப் பதிலாக பேருந்து இயங்குவதற்கு கரிவாயு பயன்படுத்தப்பட்டது. இது அரசின் கவனத்தை ஈர்த்தது. சென்னையிலுள்ள அரசு தொழில்துறை பயோனியருக்கு விருது வழங்கி சிறப்பித்தது. அப்பொழுது பயோனியருக்கு வயது 45.

22. 1942ஆம் ஆண்டு, அதாவது 45 வயதில் இராசாக்க மங்கலத்தில் பெரியளவில் நிலம் வாங்கி, அதில் நவீன உப்பளங்களை உருவாக்கினார். அதில் பலருக்கு வேலை வாய்ப்பைக் கொடுத்தார்.

23. 1942ஆம் ஆண்டு, போர் உபகரணங்கள் தாயரிப்பதற்கு அரசு மானியத்துடன் நாகர்கோயிலில் தொழில்நுட்பப் பயிற்சி நிறுவனத்தை பயோனியர் உருவாக்கினார். ஆறுமாத ஒப்பந்தத்தின் பேரில் மாணவர்களுக்கு பயிற்சி அளிக்கப் பட்டது. திறமையான பொறியாளர்கள் உருவாக்கப்பட்டனர். இந்நிறுவனத்தின் முதல்வராக பயோனியர் செயல்பட்டு வந்தார். போருக்குப் பிறகு அப்பயிற்சி நிறுவனத்தில் மின் பொறியியல், இயந்திரப் பொறியியல் மற்றும் கருவியாக்கங்கள் குறித்த படிப்புகள் தொடங்கப்பட்டன.

24. 1942ஆம் ஆண்டு 700 ஏக்கர் நிலத்தை தடிக்காரன் கோணத்தில் வாங்கினார். அதில், தென்னை மரங்கள், மரவள்ளிக் கிழங்குகள் மற்றும் தோட்டங்கள் ஆகியவற்றை உருவாக்கினார். போர் காலத்தில் கிழங்குகளை மிகக் குறைந்த விலைக்கு ஏழை மக்களுக்கு விற்பனை செய்தார். அதனால் அக்கிழங்கு பயோனியர் கிழங்கு என அறியப்பட்டது.

25. 1943ஆம் ஆண்டு தரை ஓடுகளை தயாரிக்கவும், கூரை ஓடுகளை தயாரிக்கவும் ஆலை ஒன்றினை நாகர்கோயில் அருகில் துவங்கினார். கொல்லம் மற்றும் மங்களூர் ஓடுகளுக்கு இணையாக தரம் வாய்ந்ததாக தயாரிக்கப்பட்டன. அப்பொழுது பயோனியருக்கு வயது 46.

26. 1946ஆம் ஆண்டு பயோனியர் – பிரகதி திரைப்பட விநியோகிப்பாளர்கள் குழுமம் ஒன்றினை கேரளா நண்பருடன் துவங்கினார். கேரளா நண்பர் ஏமாற்றியதால் ஐந்து இலட்சம் வரை இழப்பு ஏற்பட்டது. அப்பொழுது அவருக்கு வயது 49.

27. 1948ஆம் ஆண்டு 600 ஏக்கர் நிலம் வாங்கினார். அதற்கு பால்குளம் பண்ணை என பெயரிட்டார். உலகப் போருக்குப் பின்பாக ரப்பர் விலை ஏற்றம் கண்டதால் ரப்பர் மரங்களை நட்டுவைத்தார்.

28. 1952ஆம் ஆண்டு அவருடைய அன்பு மனைவி நாகம்மாள் மரணம் அடைந்தார். அப்பொழுது பயோனியருக்கு வயது 55.

29. 1953ஆம் ஆண்டு அவருடைய மனைவி நினைவாக வெட்டுர்ணிமடத்தில் நாகம்மாள் பவனம் பெயரில் வீடு ஒன்றினைக் கட்டி முடித்தார். அவ்வீட்டிற்கு பயோனியர் இடம்பெயர்ந்தார். அப்பொழுது பயோனியருக்கு வயது 56.

30. 1958ஆம் ஆண்டு நாகம்மாள் ஆலையை துவங்கினார். இது பன்னிரண்டாயிரம் சுழல் திறன்கொண்ட நூற்பாலை. இதற்குரிய இயந்திரங்கள் சப்பானிலிருந்தும் உள்ளூரிலிருந்து தருவிக்கப்பட்டன. நாகம்மாள் ஆலைக்கு வேண்டி இந்தியன் வங்கியின் கிளை நாகர்கோயிலில் துவங்கப்பட்டது. அப்பொழுது பயோனியருக்கு வயது 61.

31. 1960 ஆகத்து மாதம் நாகம்மாள் பவனுக்கு சென்ற திவான் சி.பி. இராமசாமி அய்யர் பயோனியரிடம் உடல்நலம் குறித்து விசாரித்தார்.

32. 1960ஆம் ஆண்டு அக்டோபர் 18ஆம் தேதி வேலூர் மருத்துவமனையில் வைத்து பயோனியர் மரணம் அடைந்தார். மரணத்திற்கு முன்பாக அவரது உடல் நோயை மருத்துவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. பிரேத பரிசோதனைக்குப் பின்பாக அவர் புற்றுநோயால் மரணம் அடைந்தார் என்பது உறுதி செய்யப்பட்டது. அப்பொழுது அவருக்கு வயது 63.

# 11

# பயோனியர் குமாரசாமி குறித்து சான்றோர்கள்

பயோனியர் குமாரசாமி, நமது உள்ளூர் வரலாற்றின் ஒரு பகுதி. தமிழ் நாட்டு வரலாற்றில் ஒரு குறிப்பிடத்தக்க ஓர் இடத்தைப் பிடித்தவர். எந்தவொரு வரலாற்று ஆசிரியரின் பேரின்ப சலுகையால் அவர் உயரிய இடத்திற்கு செல்லவில்லை. அவரது முழு பக்தியாலும் அயராத உழைப்பாலும் தன்னை உயரிய நிலைக்கு உயர்த்திக் காட்டியவர். தமிழ்நாட்டு மக்களுக்கு வாழ்நாள் முழுவதும் சேவையாற்றிய ஓர் அறிவாளியின் சேவையை நீங்கள் நினைவுகூர வேண்டிய தருணமிது.

வலம்புரி சான்,
முன்னாள் நாடாளுமன்ற சட்டமேலவை உறுப்பினர்.
இலயோலா கல்லூரி பேராசிரியர், சென்னை.

பயோனியர் குமாரசாமி அவர்களும் எனது தந்தையார் டி.வி. இராமசுப்பையர் அவர்களும் மிக நெருங்கிய நண்பர்கள். இருவருமே தங்களது உழைப்பால் குமரி மாவட்டத்திற்குப் பெருமை சேர்த்தவர்கள். குமரி மாவட்டம் முழுக்க முழுக்க விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டது. இங்குள்ள மக்கள் தொழில் துறைக்கு மாறிவருவது அபூர்வம். ஆனால் திரு. பயோனியர் குமாரசாமி அவர்கள் இந்த அடிப்படை கருத்தையே மாற்றி புதுமை செய்தவர். தொழில் துறையில் குமரி மாவட்டத்திற்கு மட்டுமல்ல. தமிழகத் திற்கே வழிகாட்டியாக திகழ்கிறார். அவர்களது வரலாற்றைப் பாடத் திட்டங்களில் சேர்க்கலாம். வருங்கால சந்ததியினருக்கு அது வழிகாட்டியாக விளங்கும்.

ஆர். சத்தியமூர்த்தி,
தினமலர் பங்குதாரர்.

பல துறைகளில் முன்னோடியாக இருந்து வெற்றிகளைக் குவித்த இப்பெரியாரின் வாழ்க்கை ஒரு காவியமாகவே பளிச்சிடுகிறது. நாஞ்சில் நாடு தமிழகத்திற்கே, இல்லை நம் இந்தியாவிற்கே இவரை விலைமதிக்க முடியாத ஒரு ஒளிமிகு வைரமாக வழங்கி, தனக் கென ஒரு ஈடு இணையற்ற பெருமையை சேர்த்துக் கொண்டது என்று துணிந்து சொல்லலாம். வறுமையில் வாழ்க்கையைத் தொடங்கி விடாமுயற்சி, அசையா உறுதி, கடினமான உழைப்பு, கொள்கைப் பிடிப்பு, தன்னம்பிக்கை ஆகிய தகவுகளோடு சிறுகச் சிறுக முன்னேற்றம் கண்டு பயோனியர் மோட்டார் சேவை என்னும் நிறுவனத்தின் அதிபராக உயர்ந்து, அதன்பிறகு மலைத் தோட்டங்கள், பெட்ரோல் பங்க், அரசி ஆலை, பொறியியல் பள்ளி என பலவற்றிற்குச் சொந்தக்காரராகி, இறுதியில் நாஞ்சில் நாட்டின் தொழிற்புரட்சிக்கு முன்னோடியாக திகழ்ந்தவர் ஒரு அசாதாரண மனிதராகத்தான் இருந்துள்ளார். தான் பெற்ற செல்வம் பெருக பயோனியர் குமாரசுவாமி அவர்களின் உள்ளமும் விரிந்து பரந்து சமுதாய மக்களின் முன்னேற்றத்தில் ஈடுபட்டது பாராட்டுக்குரிய ஒன்றாகும்.

முனைவர். சை.வே. சிட்டிபாபு,<br>துணை வேந்தர்,<br>மதுரை காமராசர் பல்கலைக்கழகம் மற்றும்<br>அண்ணாமலை பல்கலைக்கழகம்.

மனிதர்கள் பலர் ஏதோ பிறந்தோம் வாழ்ந்தோம் என்று காலம் கழித்து மறைந்துவிடுவார்கள். ஆனால் ஒரு சிலர் பிறவிப்பயன் தனக்கெனக் கருதாது இந்த நாட்டுக்காகவே என்று கருதி கடுமையாக உழைத்து மனித இனத்திற்குப் பலனுள்ள பல சாதனைகள் செய்து மக்கள் மனதிலே என்றும் நிலைத்து நிற்பர். அத்தகைய உயர்ந்தோர் வரிசையில் பிறந்து வாழ்ந்து மறைந்து இன்று குமரி மாவட்ட மக்கள் மனதிலே நிலைத்து நிற்பவர் பயோனியர் குமாரசாமி அவர்கள்.

விசுவநாத் செகாவ்கர்,<br>மாவட்ட ஆட்சித் தலைவர்,<br>கன்னியாகுமரி மாவட்டம்.

அவர் வாழ்ந்த நாட்களில் இந்திய தேசம் சுதந்திரம் அடையவில்லை. இங்கே சனநாயக ஆட்சி நடைபெறவில்லை. அப்போது பயோனியர் குமாரசாமி என்ற ஒரு தனி மனிதனுக்கு இந்த நாட்டு மக்களுக்குத் தேவையான பல்வேறு நலத் திட்டங்களையும் ஆரம்பிக்க வேண்டும் என்ற எண்ணம் எவ்வாறு உண்டாயிற்று என்பதனை எண்ணுகின்ற போது மனதில் உறுதி பிறக்கிறது.

சேம்சு,
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்.

தடிக்காரன்கோணத்திலே பூமியை வாங்கி அங்கே கிழங்கும் பழமும் வளரச் செய்தார். பயோனியர் கிழங்கு இருக்கிறதா? பயோனியர் ஏத்தன் பழம் இருக்கிறதா? என்று கேட்டுப் பொருட்களை வாங்குவார்கள் பயனோயர் இரப்பர் வந்த பிறகுதான் குமரி மாவட்டத்தில் பல பகுதிகளில் இரப்பர் தொழிற்சாலையே உருவாயிற்று. 37 ஆண்டுகளாகப் பெரிய புரட்சியை அவர் செய்தார்.

எம்.சி. பாலன்,
முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்.

தடிக்காரன்கோணத்திலே விவசாயக் கல்லூரி வரும் என்று நினைத்துக் கொண்டிருந்தோம். அந்தத் தடிக்காரன் கோணத்திலே தான் அவர் மரச் சீனிக் கிழங்கை விளைவித்திருந்தார். அந்த தடிக்காரன் கோணத்திலேதான் இரப்பர் தோட்டத்தை கொண்டு வந்திருக்கிறார்.

குமரி அனந்தன்,
முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்.

குமாரசாமி அவர்கள் உழைப்பின் சிறப்பை உலகுக்கு அறிவிக்க வந்த அறிஞர். மனிதன் என்னும் மெல்லிய மலரின் ஆற்றலை வெளிக்கொணர வழிவகுத்த ஞானி. சாதியும் பூசலும் நிறைந்த திருவிதாங்கூரில் நசுக்கப்பட்ட மக்களுக்குத் தொழிலைக் கொடுத்து அவர்கள் வாழ்வில் விளக்கேற்றி வைத்த பெரியவர்.

மிகவும் எளிய தோற்றம், எந்நேரமும் புன்னகைக்கும் முகம், அருள் சுரக்கும் விழிகள், இனியன பேசும் நாவு, நல்லன எண்ணும் உள்ளம், எண்ணியவற்றை செயல்படுத்தும் திறம், வரவு வந்து விட்டதென்று வெடித்துச் சிரிக்காத உள்ளம், நெகிழ்ச்சியுற்றபோது நொடிந்து விழாத இதயம், எந்நிலையிலும் சித்திரைத் தாமரைப்போல் மலர்ந்திருக்கும் முகம். தோற்றத்தில் குடியானவன். செயலில் ஓர் செங்கோல் அரசன்.

என். வில்சன் அப்பலோ
முன்னாள் மேல்சபை உறுப்பினர்.

பயோனியரிடம் இயல்பாக இருந்த நற்குணங்கள் சிக்கனமும் புலனடக்கமும் ஆகும். அவை, அவரை வாழ வைத்தன. நாவின் சுவைகளுக்கோ, பிற இச்சைகளுக்கோ என்றும் அவர் இடம் கொடுக்கவில்லை. தான் ஈட்டிய செல்வத்தை ஊதாரித்தனமாக செலவழிக்காமல் சிக்கனமாய் இருந்து எறும்புபோல சேர்த்தார். ஈட்டிய செல்வத்தை வளங்கொழிக்கும் துறைகளில் முதலீடு செய்தார். வெற்றியும் கண்டார். எங்கும் எதிலும் எளிமையைக் கடைபிடித்தார். காட்சிக்கு எளியவராய் இருந்தார். எளிமையான உடைகள்; அனால் நாகரிகமாகக் காணப்பட்டார்.

எ. சுவாமிதாசு,
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்.

பயோனியர் அவர்கள் படமாக மட்டுமல்ல; பாடமாகவும் விளங்கிக் கொண்டிருக்கிறார். சிலையாக மட்டுமல்ல; வழிகாட்டியாகவும் விளங்கிக் கொண்டிருக்கிறார். பிறந்து வளர்ந்து சாதனைகள் பல புரிந்து சிறப்புகள் பல பெற்ற அவரை, அவர் மண்ணிலேயே நாம் பாராட்டிக் கொண்டிருப்பது கொல்லன் தெருவில் ஊசி விற்றதுபோல் ஆகும்.

இரா. பெர்னார்டு,
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்.

## நூலாசிரியரின் பிற நூல்கள்

1. நீதிமன்றக் கூண்டில் திருக்குடும்பம் (கட்டுரை, மனித வாழ்வுரிமை இயக்கம், மண்டைக்காடு, 2005)
2. தகவல் அறியும் உரிமைச் சட்டம் (சட்டம், மனிதவுரிமை சேவை மையம், நாகர்கோவில், 2007)
3. அமெரிக்க அடிமைகளின் அணுவிபத்து மசோதா (கட்டுரை, ஆதாம் ஏவாள் பதிப்பகம், 2010)
4. மறுபக்கத்தின் மறுப்பக்கம் – மண்டைக்காடு கலவரம் (திறனாய்வு, ஆதாம் ஏவாள் பதிப்பகம், நாகர்கோவில், 2011)
5. புற்றீசல்போல் கிளம்பும் புற்றுநோய் (கட்டுரைகள், நெய்தல் வெளி, நாகர்கோவில், 2011)
6. விரட்டியடிக்கப்பட்ட இறைவன் (கவிதைகள், ஆதாம் ஏவாள் பதிப்பகம், 2012)
7. இயேசு சிலுவையில் அறையப்பட்டாரா ? (ஆய்வுநூல், புர்கான் பப்ளிகேசன், சென்னை, 2012)
8. திருவிவிலியம் இயேசுவை இழிவுபடுத்துகிறதா ? (ஆய்வுநூல், புர்கான் பப்ளிகேசன், சென்னை, 2012)
9. குமரிக் காங்கிரசின் தந்தை கொட்டில்பாடு S. துரைசாமி (வரலாறு, தெற்கு பதிப்பகம், 2013)
10. உள்ளாட்சி மற்றும் மீன்வளத்துறை மந்திரி லூர்தம்மாள் சைமன் (வரலாறு, தெற்கு பதிப்பகம், 2015)
11. குளச்சல் (இனயம்) பெட்டகத் துறைமுகம் – குமரிவாழ் மக்களுக்கு வரப்பிரசாதமா ? (கட்டுரை, தெற்கு பதிப்பகம், 2016)
12. மீனவ வீரனுக்கு ஒரு கோவில் – பொய்யும் புனைவும் (திறனாய்வு, தெற்கு பதிப்பகம், 2016)

13. பள்ளம்துறை (கட்டுரை, நெய்தல்வெளி, 2017)
14. கண்காணி (திறனாய்வு, தெற்கு பதிப்பகம், 2017)
15. இயேசுவின் மனைவி மகதலேனா மரியா (ஆய்வுநூல், ஆதாம் ஏவாள் பதிப்பகம், 2018)
16. குளச்சல் போர் – கட்டுக் கதைகளும் கற்பனைக் குதிரைகளும் (திறனாய்வு, நெய்தல்வெளி, 2018)
17. குளச்சல் போர் 1740–1741 (மொழிபெயர்ப்பு, ஆதாம் ஏவாள் பதிப்பகம், 2018)
18. தேசிய கடல் மீன்வள மசோதா – ஓர் ஆய்வு (கட்டுரை, நெய்தல்வெளி, 2019)
19. கிறித்தவத் தேவாலயச் சட்டம் – ஓர் அவசரத் தேவை (கட்டுரை, நெய்தல்வெளி, 2020)
20. முக்குவர் சட்டம் (மொழிபெயர்ப்பு, நெய்தல்வெளி, 2020)
21. சிலுவையேற்றம் – கண்ணால் கண்ட சாட்சி (மொழிபெயர்ப்பு, பொன்னுலகம் பதிப்பகம், திருப்பூர், 2021)



உலகில் மனிதர்கள் பிறக்கிறார்கள்; இறக்கிறார்கள். சிலர் மட்டுமே வரலாற்றில் இடம் பிடிக்கிறார்கள். அத்தகைய மாமனிதர்களில் ஒருவரே பயோனியர் குமாரசாமி அவர்கள். குமரி மாவட்ட தொழில்சார் வரலாற்றில் தடம் பதித்தவர். சமுகச் சூழலின் தேவை கருதி முன்னெடுத்த தொழில் வளர்ச்சி பற்றிய முன் உதாரணங்களை இந்நூல் வரலாறாக வழங்குகிறது.



விலை: 90 /-

